POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 56

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சிதலைவர்-விடுதலைபுலிகள்

Regd. No. TN - MS [C] 244 Phone: 420212 பக்கம் 12 விலை 100 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10 சென்னை 29-6-1986 ஞாயிறு : வெளியீடு 30 6 1986 திங்கள் இதழ் 249

# 1 மணி நேர சந்திப்பு

## புதிய சமரச திட்டத்தை வழங்கினார் முதல்வர்

சென்னை, ஜூன் 29- முதல்வர் புரட்சித் தலைவரை ஈழ விடுதலை இயக்கத்தினர் இன்று ஒரு மணி நேரம் சந்தித்துப்பேசினர். இலங்கைத் தமிழர் பிரச்சினை தீருவதற்கான புதிய சமரசத் திட்டத்தை ஈழவிடுதலை இயக்கத்தினரிடம் முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினார்.

ஈழவிடுதலை இயக்கத்தினர் மத்திய அமைச்சர் ப. சிதம்பரத்தை நேற்று சந்தித்துப் பேசினர்.

இன்று முதல்வர் புரட்சித் தலைவரை ஒரு மணி நேரம் சந்தித்துப் பேசினர்.

இந்தப் பேச்சுவார்த்தையில் ஈழ விடுதலை இயக்கங்களின் பல்வேறு பிரிவுகளையும் சேர்ந்த தலைவர்கள் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது.

### பிரபாகரன்

விடுதலைப் புலிகள் இயக்கத் தலைவர் பிரபாகரன், தமிழ் மக்கள் விடுதலை இயக்கத்தின் (பிளாட்) தலைவர் முகுந்தன், ஈழமக்கள் புரட்சிவிடுதலை முன்னணி தலைவர் பத்மநாபன், ஈரோஸ் (ஈழ விடுதலை இயக்கம்) தலைவர் பாலகுமார் டெலோ தலைவர் செல்வம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

ஒருமணி நேரம் நடந்த இந்தப் பேசுவார்த்தையில் பல்வேறு முக்கிய பிரச்சினைகள் குறித்து புரட்சித்தலைவரும், ஈழத் தமிழ் இயக்கத் தலைவர்களும் ஆலோசித்தனர்.

ஈழத் தமிழர் பிரச்சினை தீர, இலங்கை அரசு தயாரித்த புதிய சமரச திட்டத்தை மத்திய அரசு முதல்வர் புரட்சித் தலைவரிடம் வழங்கியது. அந்தத் திட்டங்களை ஈழத் தமிழர் தலைவர்களிடம் முதல்வர் புரட்சித் தலைவர் வழங்கியுள்ளார்.

இந்த பேச்சுவார்த்தையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனும், காங்கிரஸ் பொதுச்செயலாளர் மூப்பனாரும் கலந்து கொண்டனர்.

புதிய சமரச திட்டத்தைப் படித்துப் பார்த்துவிட்டு மேற்கொண்டு பேச்சு நடத்த டெல்லிக்கு வருமாறு ஈழத்தமிழர் தலைவர்களை மத்திய அரசு அழைத்துள்ளது.

### கழகத்தில் இணைந்த திமுக.வினர்

தஞ்சை, ஜூன் 29— வேதாரண்யம் ஒன்றியம் ஆயக்காரன்புலத்தில் கழக கூட்டம் நடந்தது. கூட்டத்தில் அமைச்சர் வீராசாமி கலந்துகொண்டு பேசினார்.

இந்தக் கூட்டத்தில் அமைச்சர் வீராசாமி முன்னிலையில் தி.மு.க.விலிருந்து விலகிய கோவிந்தராஜ், தர்மலிங்கம், வைத்திலிங்கம், வீரப்பன், சேதுபக்கிரிசாமி, ஏ. வடிவேல்நாதன், தங்கராஜ் ஆகியோர் கழகத்தில் இணைந்தனர்.

### உலக கோப்பை கால்பந்து போட்டி

மெக்சிகோசிட்டி, ஜூன் 29 மெக்சிகோவில் நடைபெறும் உலகக் கோப்பை கால்பந்துப் போட்டியின் இறுதி ஆட்டம் மேற்கு ஜெர்மனிக்கும் அர்ஜெண்டினாவிற்கும் இடையே இன்று நடைபெறுகிறது

இந்தப் போட்டியை இந்திய டெலிவிஷன் நேரடியாக ஒளிபரப்புகிறது. இரவு 11-10 மணிக்கு ஒளிபரப்பு தொடங்குகிறது.

### சத்துணவுக்கூடம் அமைச்சர் கோவேந்தன் திறந்தார்

தஞ்சை, ஜூன் 29— தஞ்சைமாவட்டம் வடசகுநத்தம் கிராமத்தில் சத்துணவுகூடத்தைஅமைச்சர் கோவேந்தன் திறந்து வைத்தார்.

இவ்விழாவில் மாவட்ட வருவாய்த்துறை அலுவலர் கிருஷ்ணசாமி மாவட்டச் செயலாளர் இரா. சாமிநாதன் காசிநாதன் ஆகியோர் கலந்துக் கொண்டனர்.

### புதுவையில் கள் கடைகளை அரசே நடத்துகிறது

புதுவை, ஜூலை 29— கள் மற்றும் சாராயக கடைகளை அரசு ஏற்று நடத்தத் திட்டம் உள்ளது என்று அமைச்சர் ஜோசப் மரியதாஸ் கூறினார்.

புதுவைகூட்டுறவுத்துறை அமைச்சர் எஸ். ஜோசப் மரியதாஸ் நிருபர்களிடம் கூறியதாவது:-

கடந்த இரண்டு தினங்களாக இவ்வாண்டிற்கானகள், சாராயக்கடைகள் தனியாருக்கு ஏலம் விடப்பட்டது. ஆனால் ஏலத்தில் எவரும் கலந்து கொள்ளவில்லை.

இதையொட்டி அமைச்சர் மரியதாஸ் நிருபர்களிடம் கள், மற்றும் சாராயக் கடைகளை கூட்டுறவுத் துறைமூலம் நடத்த திட்டம் உள்ளது என்றும் இதுபற்றி மாநில முதல்வர் மற்றும் மாவட்ட ஆட்சித் தலைவர் ஆகியோரைக் கலந்து ஆலோசித்ததாகவும் கூறினார்.

### ஒரிசா சட்டமன்ற முன்னாள் சபாநாயகர் மரணம்

புவனேஸ்வர் ஜூன் 29— ஒரிசா சட்டமன்ற முன்னாள் சபாநாயகர் நந்தா கிஷோர்தாஸ் நேற்றிரவு மரணமடைந்தார். அவருக்கு 93 வயதாகிறது.

தாசிற்கு மனைவியும், 4 குழந்தைகளும் உள்ளனர் தாஸ் கடந்த சிலநாட்களாகவே உடல் நலம் குன்றி இருந்தார். அவரை மருத்துவமனைக்கு சிகிச்சைக்காக எடுத்துச்சென்றபோது அங்கு இறந்தார்.

## பூக்கும் 10-ஆம் ஆண்டு பொலிவு பெறுக!

-: இரா. நெடுஞ்செழியன் :-

மாண்புமிகு பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவர் அவர்கள் தமிழகத்தின ஆட்சிப் பொறுப்பை ஏற்று, ஒன்பது ஆண்டுகள் முடிவு பெற்றுப் பத்தாவது ஆண்டு தொடங்கப்பெறுகின்ற நன்னாளாகிய 30-6-86- ஆம் நாளை தமிழகமே ஒன்று திரண்டு நின்று கொண்டாட முனைப்புள்ளத்தோடு முன்வந்துள்ளதைக் கண்டும் - கேட்டும் கழிபெரு மகிழ்ச்சியுறுகிறோம்.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தைக் கட்டிக் காத்து வளர்க்கும் பணியிலும், புரட்சித்தலைவரின் ஆட்சிக்கு உறுதுணையாக இருந்து பாதுகாப்பு அளிக்கும் பணியிலும் ஈடுபட்டு அறிவு வாளையும், ஆற்றல் கேடயத்தையும் தாங்கிப் பணியாற்றிவரும் 'அண்ணா' நாளிதழ், விழாவை உரியமுறையில் கொண்டாடும் வகையில், தனிச் சிறப்பிதழினை வெளிக்கொண்டு வருவது போற்றிப் பாராட்டி, வரவேற்று மகிழ்வதற்குரியதாகும்.

புரட்சித்தலைவரின் ஆட்சியின் அருமையையும், அதனால் ஏற்பட்டுவரும் மாட்சியின் பெருமையையும் உலகுக்கு உணர்த்தி வருவதில் "அண்ணா" நாளிதழ் முன்னணியிலிருந்து அரும்பணியாற்றி வருகிறது.

சிறப்பு மலர் கருத்து மணங்கமழ சிறந்து விளங்குவது பாராட்டுவதற்குரியது.

சிறப்பு மலருக்கு என் உளங்கனிந்த வாழ்த்துக்கள்!

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க!

அவரது அரும் பெரும் ஆட்சி வலிவு பெற்று ஓங்கு புகழ் எய்தி வளர்க!

அவரது சீரிய நற்றொண்டுகள் வெல்க!

பூக்கும் பத்தாம் ஆண்டு பொலிவு பெறுக!

### டெல்லியில் பலத்த மழை

புதுடெல்லி, ஜூன். 29— தென்மேற்கு பருவமழை டெல்லி நகரை கடந்த இரண்டு நாட்களாக குளிர்வித்துள்ளது. இதுபோல் உத்தர பிரதேசம் பஞ்சாப் மேற்கு வங்காளம், ஒரிசா, ஆகிய இடங்களில் பலத்த மழை பெய்துள்ளது, இப்போது தென்மேற்கு பருவக்காற்று ஜம்மு காஷ்மீர் பகுதியை நோக்கிச் செல்வதாக வானிலை அறிக்கை தெரிவிக்கிறது

இதனால் ஜம்மு காஷ்மீர் பகுதியிலும், பஞ்சாபிலும் அடுத்த 24 மணி நேரத்தில் பலத்த மழை பெய்யக் கூடுமென வானிலை வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.

### மாநிலங்களுக்கு கூடுதல் சமையல் எண்ணெய்

புதுடெல்லி ஜூன் 29— மாநிலங்களின் நியாய விலை கடைகள்மூலம் விநியோகிக்கப்படும் சமையல் எண்ணெயின் அளவை மத்திய அரசு உயர்த்தியுள்ளது.

நடப்பு மாதத்திற்கு 55 ஆயிரத்து 740 டன் சமையல் எண்ணெய் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்டது.

அடுத்த மாதத்திற்கு 59 ஆயிரத்து 790 டன்களாக உயர்த்தப்பட்டுள்ளதாக மத்திய அரசு அறிவித்துள்ளது.

## காவிரிப் பிரச்சினை: டிரிப்யூனல் அமைக்க விவசாயிகள் கோரிக்கை

திருச்சி, ஜூன் 29— காவிரி தண்ணீர் பிரச்சினை தீர, மத்தியஅரசு விரைவில் டிரிப்யூனல் அமைக்க வேண்டும் என காவிரி டெல்டாவிவசாயிகள் கோரியுள்ளனர்.

திருச்சியில். காவிரி டெல்டா விவசாயிகள்சங்க கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்தில் காவிரிபிரச்சினையில் விரைவில் தீர்வு காண மத்தியஅரசு டிரிப்யூனல் அமைக்கவேண்டும்.

இந்தப் பிரச்சினையில் தீர்வுகாணப்படாவிட்டால் தமிழ்நாடு. காரைக்கால் பகுதியில்விவசாயம் அறவே பாதிக்கப்படும் ஆகவே மத்தியஅரசு விரைவில் இப்பிரச்சினையை தீர்க்க வேண்டும். எனவும் தீர்மானத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது

இத்தகவலை மாநாட்டின் அமைப்பாளர் லால்குடி வி. ராஜேந்திரன் தெரிவித்துள்ளார்.

ஏற்கனவே தமிழக அரசு காவிரி பிரசசினை தீர டிரிப்யூனல் அமைக்க கோரியுள்ளது தெரிந்ததே.

# சென்னை மாநகரையே குலுக்கிய சைக்கிள் பேரணி

## புரட்சித்தலைவரது போர்ப்படை அணிவகுத்து வந்த அற்புதக்காட்சி

சென்னை, ஜூன், 29— முதல்வர் புரட்சித் தலைவரது ஆட்சியின் 10ம் ஆண்டு தொடக்க விழாவினை ஒட்டி சென்னை நகரில் கழகக் கண்மணிகள் நடத்திய சைக்கிள் பேரணி நகரை குலுக்கும் வகையில் நடந்தது

வங்கக்கடல் நகருக்குள் புகுந்ததோ என்று வியக்கும் வண்ணம் லட்சக்கணக்கான சைக்கிள்கள் சென்னை மாநகர வீதிகளில் பவனி வந்தது.

புரட்சித்தலைவரது பொற்கால ஆட்சி9ஆண்டுகள் நடந்து முடிந்து 10-ம் ஆண்டு தொடங்குகிறது. அதனை ஒட்டி சென்னை நகரில் கழகத்தோழர்களும் மன்றமறவர்களும் மாபெரும் சைக்கிள்பேரணியை இன்று நடத்தினர்.

சைக்கிள் பேரணி அண்ணா நகர் அண்ணா பவள விழா வளைவில் இருந்து பிற்பகல் புறப்பட்டது.

அமைச்சர் அண்டே தலைமையில் சென்னை மாவட்ட கழக செயலாளர் ஜேப்பியார். எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் மதுசூதனன் ஆகியோர் முன்னிலையில் பேரணி தொடங்கியது

### கழகக் கொடி

பேரணியில் சுமார் லட்சம் சைக்கிள்களில் கழகக் கொடிகள் படபடவென்று வீசிப் பறக்க அணி அணியாக வந்தனர்.

சுமார் 15 ஆயிரம் சைக்கிள் ரிக்ஷாக்களில் பெண்கள் இருவண்ணக் கொடி ஏந்திச் சென்றனர்,

பேரணியில் பங்கேற்க நகரில்உள்ள 14சட்டமன்ற தொகுதிகளில் இருந்து கழகத் தோழர்கள், மன்ற மறவர்கள், தொழிலாளர் தோழர்கள் மகளிர் பிரிவினர் அணி அணியாக. அலை அலையாக அண்ணா நகர் பவள விழா வளைவு நோக்கி முற்பகலில் இருந்து வந்த வண்ணம் இருந்தனர்.

நகரத்து முக்கிய வீதிகள் அனைத்துமே முற்பகல் முதல் அண்ணா நகர்நோக்கி பயணம் கொண்டு இருந்தது.

பேரணி துவங்கிய அண்ணா பவளவிழா வளைவு விழாக்கோலம் பூண்டு இருந்தது.

### வாழ்த்து முழக்கம்

எங்கும் தோரணங்கள் எங்கும் கழகக் கொடிகள் புரட்சித்தலைவர் வாழ்க என்ற வாழ்த்து முழக்கம் விண்ணை பிளந்தது கழகத்தவர்கள் நடத்திய பேரணியால் பார் அதிர்ந்தது.

பிற்பகலில் புறப்பட்ட புரட்சித் தலைவரின் இந்த சைக்கிள் படை. பெரியார் சாலை, சேத்துப்பட்டு பாலம், வில்லேஜ்சாலை வள்ளுவர்கோட்டம். ஆற்காடுசாலை, உஸ்மான் சாலை, பனகல் பூங்கா தியாகராயர் சாலை அண்ணாசாலை திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை. பாரதிசாலை வழியாக கடற்கரை சீரணி அரங்கை இரவு அடைகிறது. ஊர்வல வழியில் 8 இடங்களில் மேடைகள் அமைக்கப்பட்டு இருந்தது. அங்கு காலை முதலே புரட்சித் தலைவரது புகழ்பரப்பும் பாடல்கள் ஒலி முழக்கமிட்டன. ஊர்வலம் செல்வதைஒட்டி. பிற்பகல்முதல் இந்த மேடைகளில் கழக கலை நிகழ்ச்சிகள் நடந்தன.

### பிரமாண்ட கட்அவுட்

அண்ணா சாலையில் அண்ணா மேம்பாலம் அருகேயும், தேனாம்பேட்டை சிக்னல்அருகேயும் பெரியார்சிலை அருகிலும் புரட்சித்தலைவரது பிரமாண்டமான கட் அவுட் வைக்கப்பட்டுள்ளது.

ஊர்வலப்பாதை எங்கும் இருபுறமும் வெள்ளக்காலத்து வாய்க்கால் போல் மக்கள் நின்று இருந்தனர்.

சீரணி அரங்கில் நாதசுர மேதைகள் எம்.பி.என். சேதுராமன் எம்.பி.என். பொன்னுசாமி குழுவினரது நாதமழைக்கு பிறகு பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

அமைச்சர் அண்டே, அலமேலு அப்பாதுரை, க. சுப்பு, ஜேப்பியார், மதுசூதனன் ஆகியோர் பேசுகின்றனர்.

### வண்ண வளைவுகள்

சென்னை நகரில் சைக்கிள் பேரணி நடத்துவதை ஒட்டி நகர் முழுவதும் தோரணங்கள், கொடிகளால் அலங்காரம் செய்யப்பட்டு விழாக்கோலம் பூண்டுள்ளது.

புரட்சித் தலைவரது ஆட்சியின் புகழ் பரப்பும் வகையில் பல வளைவுகள் அமைக்கப்பட்டுள்ளன.

# மதுரை, திருச்சியில் விமானபடை: நிலம்தர தமிழக அரசு ஒப்புதல்

மதுரை, ஜூன் 29— மதுரை, திருச்சியில் விமானப்படை தளம் அமைக்க தமிழக அரசு நிலம் தர ஒப்புதல்அளித்துள்ளதாக விமானப் படை அதிகாரி இங்கு கூறினார்.

தென்பிராந்தியவிமானப் படை தளபதி ஏர்மார்ஷ் டி.ஜே.தேஜா மதுரையில் நிருபர்களிடம் பேசினார். அப்போது மதுரை, திருச்சியில் விமானப் படைதளம், பயிற்சி நிலையம்ஆகியவை அமைக்க தமிழக அரசு நிலம்தர தயாராக இருப்பதாக தெரிவித்துள்ளதாக கூறினார்.

தமிழக அரசு தெரிவித்துள்ள இடங்கள் பற்றி மத்திய அரசுக்கு தகவல் தெரிவிக்கப்படும் அது பற்றி மத்திய அரசு முடிவு செய்யும்.

மத்திய அரசு இந்தத் திட்டத்தை அங்கிகரித்து பண ஒதுக்கீடு செய்தால் இன்னும் 6 மாதத்திற்குள் இந்தப் பணிகள் துவங்கப்பட்டு விரைவில் பணிகள் முடிவுறும் என்றும் அவர் கூறினார்.

இது விஷயத்தில் மத்திய அரசு தாராளமாக ஒத்துழைப்பதாகவும் தேஜா கூறினார்.

இன்றைய 'அண்ணா'

12- பக்கங்கள்

100- காசு





**உழைப்பு**

நமக்கு இன்னலும் இடையூறும் இருக்கத்தான் செய்யும்; ஆனால் நமது உழைப்பு ஒரு நாளும் வீண்போகாது.

—பேரறிஞர் அண்ணா

**கல்வி**

நாம் கற்ற கல்வி, வாழ்க்கைக்கு பயன்பட்டு அதனை முன்னேற்றும் வகையில் இருக்க வேண்டும்.

—தந்தை பெரியார்

# தி.மு.க. வெற்றி செல்லாது ஜனதா கட்சி வழக்கு

சென்னை ஜூன் 29— ராஜ்யசபை தேர்தலில் தி.மு.க பெற்றுள்ள வெற்றி செல்லாது என்று இரா. செழியன் அறிவித்துள்ளார்.

நேற்று மாநிலங்களவைக்கு நடந்த தேர்தலில் ஜனதா கட்சியைச் சேர்ந்த செழியன் தோல்வி அடைந்ததாக அறிவிக்கப்பட்டது. அதற்கு பின் அவர் ஒரு அறிக்கை வெளியிட்டார்.

அதில் அவர் கூறியிருப்பதாவது:

நேற்று நடைபெற்ற மாநிலங்களவைக்கான தேர்தலில் வாக்குகள் எண்ணும் போது சட்ட விதிகளுக்கு மாறாக சில செல்லாத வாக்குகள் டி. ஆர். பாலுவுக்கு (தி. மு. க) சேர்த்து எண்ணப்பட்டதால் அவர் வெற்றி பெற்றதாக தவறாக அறிவிக்கப்பட்டது. முறையாக எண்ணப்பட்டு இருந்தால் அவர் தோற்று நான் வெற்றி பெற்று இருக்க வேண்டும்.

எனக்குச் சேர வேண்டிய வாக்குகளை செல்லாது என்று அறிவித்ததையும் டி. ஆர். பாலுவுக்கு செல்லாத வாக்குகளை சேர்த்து எண்ணியதையும் ஆட்சேபித்து எழுத்து மூலம் ஆட்சேபணையை தெரிவித்தேன்.

### தவறான அறிவிப்பு

சட்டத்துக்கு விதிகளுக்கும் உட்பட்டு வாக்குகள் எண்ணப்பட்டு இருந்தால் டி. ஆர். பாலு தோற்பது உறுதி. டி. ஆர். பாலுவுக்கு பதிலாக நான் வெற்றி பெற்று இருப்பேன்.

தேர்தல் அதிகாரியின் தவறான அறிவிப்பை உடனடியாக மாற்றக் கோர்ட் நீதி மன்றத்தில் வழக்கு தொடர உள்ளேன் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு இரா. செழியன் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

## சைக்கிள்பேரணியில் பர்மா பஜார் வியாபாரிகள்

சென்னை, ஜூன். 29— கழக அரசின் 10ம் ஆண்டு தொடக்க விழாவையொட்டி நடைபெறும் பேரணியில் பர்மாபஜார் வியாபாரிகள் பர்மா தமிழர் மறுமலர்ச்சி சங்கச் செயலாளர் காதாமைதீன் தலைமையில் 500 பேர் கலந்துகொள்கின்றனர். இவ்வூர்வலம் பர்மாபஜாரில் தொடங்கி அண்ணாநகர் வழியாகச் சென்று பேரணியில் கலந்து கொள்கிறது.

![ஆசிரியா]



மாநிலங்களவை தேர்தல்

# ஜி.சுவாமிநாதன் நாஞ்சில் வின்சென்ட் - கோபால் வெற்றி பெற்றனர்

சென்னை. ஜூன் 29— தமிழகத்தில் இருந்து மாநிலங்களவைக்கு நடைபெற்ற தேர்தலில் கழக வேட்பாளர்கள் ஜி. சுவாமிநாதன், நாஞ்சில் வின்சென்ட் ஆர். டி. கோபால் ஆகியோர் வெற்றிபெற்றனர்.

மாநிலங்களவைக்கு தமிழகத்தில் இருந்து 6 பேர்களை தேர்ந்தெடுக்க நேற்று தேர்தல் நடைபெற்றது.

இதில் கழகத்தின் சார்பில் போட்டியிட்ட ஜி. சுவாமிநாதன், நாஞ்சில் வின்சென்ட் ஆர். டி. கோபால் ஆகிய மூவரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கழகத்தின் சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்ற ஜி சுவாமிநாதன் தற்போது மேலவை துணைத் தலைவராக இருந்து வருகிறார்.

நாஞ்சில் வின்சென்ட், கம்பம் ஆர். டி. கோபால் ஆகியோர் தமிழக சட்டமன்ற உறுப்பினர்களாக இருந்தவர்கள் ஆவார்கள்.

### மற்ற மாநிலங்களில்...

மாநிலங்களவை உறுப்பினர்களுக்கான தேர்தல் நேற்று முழுவதும் நடைபெற்றது. மாநிலசட்டசபை உறுப்பினர்கள் ஓட்டு போட்டு இந்த உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

45 உறுப்பினர்களுக்கான தேர்தல் நேற்று நடைபெற்றது.

இதில் முன்னதாகவே 8 உறுப்பினர்கள் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டனர். மத்திய பிரதேசத்தில் 5 பேர்களும், ஒரிசா மாநிலத்தில் 3 பேர்களும் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

37 உறுப்பினர்களுக்கான தேர்தல் நேற்று நடைபெற்றது. இதில் இந்திரா காங்கிரசுக்கு 23 இடங்களும் லோகதளத்துக்கு 4 இடங்களும் கழகத்துக்கு 3 இடங்களும், பாரதீய ஜனதாவுக்கு 3, திமுக ஜனதா. காங்கிரஸ் (எஸ்) அகாலிதளம் ஆகிய கட்சிகளுக்கு தலா ஒரு இடமும் கிடைத்தன.

அகாலிதள கட்சியின் அதிகாரப்பூர்வமான வேட்பாளர் ஜகித்சிங் அரோரா வெற்றி பெற்றது குறிப்பிடத்தக்கது. இவர் தோல்வி அடைந்து விடுவார் என்று அதிருப்தியாளர்கள் சார்பில் கூறப்பட்டது. ஆனால் ஜகித்சிங் அரோரா வெற்றி பெற்றார். இந்த வெற்றி பஞ்சாப் முதல்வர்

பர்னாலாவுக்கு கிடைத்த வெற்றி என்றே கருதப்பட்டது.

நேற்று நடைபெற்ற தேர்தலில் குறிப்பிடத்தக்க வெற்றி பெற்றவர்கள் மத்திய தொழில் அமைச்சர் என். டி. திவாரி, பொருளாதார நிபுணர் எல் கே ஜா, தமிழநாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி ஆகியோர் ஆவர். தமிழகத்தில் 6 உறுப்பினர்களை தேர்ந்தெடுக்க தேர்தல் நடைபெற்றது. 232 சட்டசபை உறுப்பினர்கள் இவர்களை தேர்ந்தெடுக்க வேண்டும். நேற்றைய தேர்தலில் கழக வேட்பாளர்கள் ஜி சாமிநாதன், நாஞ்சில் வின்சென்ட் ஆர் டி கோபாலன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்திரா காங்கிரஸ் சார்பில் எம். பழனியாண்டி ஜெயந்தி நடராஜன் ஆகியோரும், திமுக சார்பில் டி. ஆர். பாலுவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாநிலங்களவையில் இந்திராகாங்கிரஸ் பெரும்பான்மை இடங்களை பெற்றிருந்தது இப்போது மீண்டும் பெரும்பான்மை பலம் பெற்றுவிட்டது.

244 உறுப்பினர் கொண்ட மாநிலங்களவையில் இப்போது இந்திராகாங்கிரசுக்கு 159 இடங்கள் கிடைத்துள்ளன. இந்திரா காங்கிரஸ் இந்தத்தேர்தலில் அமோக வெற்றி பெற்றுள்ளது.

### காங்கிரஸ் வெற்றி

காங்கிரஸ் கட்சி சார்பில் போட்டியிட்ட ஜெயந்தி நடராஜன், எம். பழனியாண்டி ஆகியோரும் வெற்றி பெற்றனர்.

## புதிய காவல் நிலையங்கள்

மதுரை, ஜூன் 29— மதுரை மாவட்டம் கடமலைக்குண்டு, கண்டமனூர் ராஜதானி, வைகை அணை, கன்னியப்ப பிள்ளைபட்டி, வருசநாடு, மயிலாடும்பாறை, சேமங்கலம் ரத்தக்கோவில் ஆகிய இடங்களில் கூடுதல் காவல் நிலையங்கள் திறக்கப்பட்டுள்ளன.

## திருவொற்றியூரில் கழக பிரச்சார நாடகம்

நாள்: 30ம் தேதி மாலை 6 மணி

இடம்: சன்னதி தெரு

தலைமை: ஆர். எஸ் முனிரத்தினம் எம். எல். ஏ

வரவேற்புரை: எஸ். ஜகத்ரட்சகன் எம். பி

சிறப்புரை: அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் கற்பூரயாற்றி ஐசரிவேலன் நடிக்கும் ராமராஜ்யம் நாடகத்தை துவக்கி வைக்கிறார். மதுரூர் பால்ராஜ், என். எஸ். மணி, பூ இராயமூர்த்தி, கே. குப்பன் மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர். அன்று காலை கொடியேற்று விழாவும் அன்னதானமும் வழங்கப்படும்.

## நமது இல்லத் திருமணம்

இடையம்பூதூர் எம் ஜி ஆர். இளைஞர் அணித்தலைவர் வி இளங்கோவுக்கும் செல்வி இந்திராவுக்கும் வருகிற ஜூலை 14ம்தேதி காலை 9 மணியில் திருமணம் உத்திர மேரூர் வட்டம் இடையம்புதூர் மணமகன் இல்லத்தில் நடைபெறுகிறது. இத்திருமணத்தை அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் தலைமை ஏற்று நடத்தி வைக்கிறார். வாழ்த்துரை வழங்குபவர்கள் ஜெகத்ரட்சகன் எம். பி போகலிங்கம், சட்டமன்ற உறுப்பினர்கள் நரசிம்மபல்லவன் கே. பாலாஜி மற்றும் குப்புசாமி, ஞானசேகரன், அரிகிருஷ்ணன், தேவராசு, காஞ்சி பன்னீர் செல்வம் காஞ்சி ஜோதிபாண்டியன் பி சுந்தாராமன் சீனிவாசன் பி. சந்திரன் எஸ் மணி, விஷ்ணு மற்றும் பலர்

## சென்னை புறப்பட்ட விமானத்தை கழுகு தாக்கியது: ரூ.1 கோடி சேதம்

புதுடெல்லி, ஜூன். 29- புதுடெல்லியில் இருந்து சென்னைக்கு புறப்பட்ட விமான பஸ்ஸை கழுகு ஒன்று குறுக்கே வந்து தாக்கியதால் அந்த விமானத்தின் ஒரு என்ஜின் பழுதடைந்தது இதனால் ரூபாய் 1 கோடி சேதம் ஏற்பட்டது. விமானமும் புறப்பட்ட இடத்துக்கே திருப்பி தரை இறங்கியது

ஆகாயத்தில் பறந்து திரியும் பறவைகளால் விமானங்களுக்கு சில தடங்கல்கள் ஏற்பட்டு விமானங்களும் சேதம் அடைவதுண்டு

இது போன்ற விபத்து ஒன்று நேற்று புதுடெல்லி விமான நிலையம் அருகே நடந்தது

"இந்தியன் ஏர்லைன்ஸ்" விமான பஸ் ஒன்று நேற்று புதுடெல்லி விமான நிலையத்தில் இருந்து சென்னைக்கு புறப்பட்டது அந்த விமானம் ஐதராபாத் வழியாக சென்னைக்கு காலை 10.05 மணிக்கு போய்ச் சேரவேண்டும்.

விமானபஸ் விமான நிலையத்தைவிட்டு மேலே கிளம்பியது ஒருபெரிய கழுகு ஆகாயத்தில் விமானத்தை குறுக்கிட்டது படு வேகமாக காற்றை கிழித்துக் கொண்டு ஓடிய விமானத்தின் மீது கழுகு பயங்கரமாக மோதியது

கழுகின் பாகங்கள் சில விமான பஸ்சின் வலது என்ஜினுக்குள் புகுந்தன. என்ஜின் சேதமடைந்து செயலற்று நின்றுவிட்டது ஒரே என்ஜின் மட்டும் வேலை செய்ய விமான ஓட்டியின் சாமர்த்தியமாக விமானத்தை மீண்டும் புதுடெல்லி விமான நிலையத்துக்கே கொண்டு வந்தார். விமானத்தில் இருந்த 246 பயணிகளும் பாதுகாப்பாக வந்து சேர்ந்தனர்.

சேதாரம் அடைந்த என்ஜினை மீண்டும் பழுது பார்த்து புதுப்பிக்க 1 கோடி ரூபாய் செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது

விமான பஸ் சேதமடைந்ததால் வேறொரு விமான பஸ் மூலம் 246 பயணிகளும் ஐதராபாத் சென்னைக்கு பயணம் ஆனார்கள் இதனால் சென்னைக்குப் போய் சேர வேண்டிய விமான பஸ் 4½ மணிநேரம் தாமதமாகப் போய் சேர்ந்தது இதர விமானங்களின் போக்குவரத்து நேரங்களும் இதனால் மாற்றி அமைக்கப்பட்டன இந்த தற்காலிக மாறுதல் இரண்டொரு நாட்களுக்கு அமலில் இருக்கும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

## மத்திய அமைச்சருக்கு ஈரலில் புற்றுநோய்

நியூயார்க் ஜூன் 29 மத்திய அமைச்சர் சந்திரசேகர சிங்குக்குப் புற்றுநோய் ஏற்பட்டுள்ளது மத்திய பெட்ரோலிய ராஜாங்க அமைச்சர் சந்திரசேகர்சிங் அமெரிக்கா சென்றார். அங்கு அவருக்கு மருத்துவப் பரிசோதனை நடந்தது.

சந்திரசேகரசிங்குக்கு ஈரலில் புற்றுநோய் ஏற்பட்டிருப்பதாக டாக்டர்கள் கூறினார்கள்,

### இந்தியாவில் சிகிச்சை

இந்தியாவுக்குச் சென்று உடனே சிகிச்சையை தொடருமாறு அமெரிக்க டாக்டர்கள் கூறினார்கள் அந்த மருந்து வகைகள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன

அமெரிக்காவுக்குத் தனது குடும்பத்தாருடன் சந்திரசேகர்சிங் சென்றிருந்தார் தற்போது அவர் புதுடெல்லி திரும்புகிறார்.

### நடுக்கடலில் வழி தப்பிய கப்பல் மீட்பு

ஐதராபாத் ஜூன் 29 நடுக்கடலில் வழி தப்பிச் சென்று திகைத்துக்கொண்டிருந்த "யாத்" என்றழைக்கப்படும் சின்னஞ்சிறிய கப்பலை தனியார் தகவல் நிறுவனம் ஒன்று சாமர்த்தியமாக மீட்டு வந்தது,

### ஆசிரியா வீட்டுவசதி தலைவர் நியமனம்

சென்னை. ஜூன் 29— தமிழ்நாடு ஆசிரியர் வீட்டு வசதி வாரியத் தலைவராக மு. மாசிலாமணி நியமிக்கப்பட்டுள்ளார்

### பழங்குடிமக்களுக்கு ரூ 21 லட்சம் ஒதுக்கீடு

திரிபுரா. ஜூன் 29— திரிபுரா அரசு பழங்குடி மக்களின் நல்வாழ்வுத் திட்டங்களுக்கு 21லட்சம் ரூபாய் ஒதுக்கீடு செய்துள்ளது. அங்குள்ள அகதிகளின் மறுவாழ்வுக்கும் பலவேறு திட்டங்கள் செயல்படுத்தவிருக்கின்றன

### பச்சைமலையில் 10-ம் ஆண்டு விழா

கோபி, ஜூன் 29— பெரியார் மாவட்டம் கோபிச்செட்டி பாளையம் பச்சைமலை கோவிலில் கழக அரசு அமைந்த 10ம் ஆண்டை முன்னிட்டு ஆயிரம் பேருக்கு அன்னதானமும் 200 பேருக்கு வேட்டி சேலை வழங்கு விழாவும் நடைபெறுகிறது. இவ்விழாவில் செங்கோட்டையன் எம். எல். ஏ வி. எம். பழனிச்சாமி, சின்னசாமி, பெரியார் மாவட்ட கூட்டுறவு நூற்பாலைத்தலைவர் கள்ளிப்பட்டி மணி மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர்.



## நெல்லை எக்ஸ்பிரஸ் தரும் தொல்லை

தமிழகத்துக்குள் செல்லும் எக்ஸ்பிரஸ் ரயில்களில் மிக முக்கியமானது நெல்லை எக்ஸ்பிரஸ் திருநெல்வேலி, திருச்செந்தூர் வட்டாரப்பயணிகள் இதை "தொல்லை எக்ஸ்பிரஸ்" என்றே குறிப்பிடுவதுண்டு காரணம் திருச்செந்தூருக்கு ஒரு வாரத்துக்கு முன்பு டிக்கெட் எடுக்கப் போனால் தீர்ந்து போய் இருக்கும். திருநெல்வேலிக்கும் கிடைக்காது. எழும்பூர் பிளாட்பாரத்தில் நிற்கும் இடைத்தரகர்களை அணுகி டிக்கெட் கட்டணத்துக்கு மேல் கொடுத்தால் அன்றைய பயணத்துக்கு அப்போதே டிக்கெட் பெர்த் எல்லாம் கிடைத்துவிடும்

எழும்பூர் ரயில் நிலைய பிளாட்பாரத்தில் பெர்த் எடுத்துக் கொடுக்க தரகர்கள் சீட் பிடித்துக் கொடுக்க தரகர்கள் வந்து இறங்கும் பயணிகளுக்கு பாகசி பிடித்துக் கொடுத்து கொள்ளை அடிக்க தரகர்கள்—

— இப்படிப் பல்வேறு வகை தரகர்கள் நின்று கொண்டு பயணிகளை கசக்கிப் பிழிகிறார்கள் ரயில் நிலைய அதிகாரிகள் அவர்கள் மீது எந்த நடவடிக்கையையும் எடுத்ததில்லை

அந்த தரகர்களே கூறுகிறார்கள் "அதிகாரிகளுக்கு எங்களால் பயன் இருக்கிறது அப்புறம் எப்படி எங்களை பிடித்துக்கொடுப்பார்கள்" என்று!

இது ஊரறிந்த விவகாரம் அதுமட்டுமா நெல்லை எக்ஸ்பிரசில் பார்சலில் சரக்குகளை திண்டுக்கல் மதுரை போன்ற நகரங்களுக்கு. அனுப்பினால் அவற்றை சரக்குவேனில் போட்டு பூட்டி சீல் வைக்கிறார்கள். திருநெல்வேலியில் போய்தான் அது திறக்கப்படும். அனுப்பப்பட்ட பார்சல்கள் திண்டுக்கல், மதுரை விருதுநகர் போன்ற உரிய இடங்களுக்குப் போய்ச் சேராது.

திருநெல்வேலிக்குப் போய் விட்டு மூன்று நான்கு நாட்கள் கழித்து பாசஞ்சர் ரயில்களில் திரும்பி மதுரை திண்டுக்கல், விருதுநகர் போன்ற இடங்களுக்கு வந்து சேரும்.

இப்படி சரக்குகள் எல்லாம் அலைக்கழிகின்றனவே என்று ரயில்வே நிர்வாகத்திடம் கேட்டால் நாங்கள் என்ன செய்வது ஆள் குறைப்பு செய்து விட்டார்கள் உரிய ரயில் நிலையங்களில் சரக்கு வண்டியைத் திறந்து சரக்குகளை இறக்க ஆள் இல்லை அவை முழுவதும் அப்படியே நெல்வேலிக்கு போய் விடுகிறது" என்று ரயில்வே அதிகாரிகள் சொல்கிறார்கள்.

இது என்ன கொடுமை? தவறுகளுக்கு நியாயம் கற்பிக்கும் நிலைமை எழும்பூர் ரயில் நிலையத்தில் தான் நடக்கிறது வேறு எந்த ரயில் நிலையங்களிலும் இப்படிப்பட்ட பிரச்சனை இல்லை ரயில்வே உயர் அதிகாரிகள் இதை கவனிப்பார்களா?

மு பாலு
ஜி ஆர் குமார்.
சென்னை—15

இதே போன்ற கருத்தை மதுரை கே. கோவிந்தராசு, திண்டுக்கல் ஆர், பாண்டியன். விருதுநகர் எஸ். செந்தூர் பாண்டியன் ஆகியோரும் தெரிவித்துள்ளனர்.

**மக்கள் மன்றம்**

# பிச்சாவரம் சுற்றுலா மையத்தில் மேலும் வளர்ச்சித் திட்டங்கள்

## அமைச்சர் ஆர். எம். வீ. தகவல்

கள்ளக்குறிச்சி, ஜூன் 29- பிச்சாவரம் சுற்றுலா மையத்தில் மேலும் பல வளர்ச்சித் திட்டங்கள் செயல்படுத்தப்படும் என அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

அமைச்சர் ஆர். எம். வீ. நிருபர்களுக்கு கள்ளக்குறிச்சியில் பேட்டியளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:—

சிதம்பரம் அருகே கடற்கரையில் அமைந்துள்ள பிச்சாவரம், சுற்றுலா மையமாக மாற்ற வேண்டும் என்பது அண்ணா காலத்தில் உருவான நீண்ட கனவு. கருணாநிதி ஆட்சி காலத்தில் கிடப்பில் கிடந்த அது, புரட்சித் தலைவர் முதல்வர் ஆன பின்தான் நடந்தது.

அமைச்சர் வி. வி. சுவாமிநாதனும், மாவட்ட ஆட்சித்தலைவர் ஆர். சி. பண்டாவும் பிச்சாவரம் சுற்றுலா வளர்ச்சியில் மிகவும் ஆர்வம் காட்டுகிறார்கள். 2 பேரும் அது குறித்து தனித்தனியே திட்டங்களை தயாரித்துக் கொடுத்துள்ளார்கள்.

மாவட்ட ஆட்சித் தலைவர் அளித்துள்ள திட்டத்தில் பிச்சாவரத்தில், முதலைப் பண்ணை, மீன்காட்சி சாலை, தொலைநோக்கி கண்ணாடி (டெலஸ்கோப்) போன்றவை அமைக்கலாம் என பரிந்துரை செய்துள்ளார்.

அமைச்சர் வி. வி. சுவாமிநாதன், பிச்சாவரம் சுற்றுலா வளர்ச்சிக்கு குழந்தைகள் பூங்கா, நீச்சல்குளம், காஷ்மீரில் உள்ளது போல படகு வீடுகள், குடில்கள் அமைத்தல் போன்றவற்றுக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார் இந்த பரிந்துரைகள் பரிசீலனையில் உள்ளன. நல்ல திட்டங்கள் பரிசீலனைக்குப்பின் இந்த ஆண்டே செயல்படுத்தப்படும்.

### சுற்றுலா வளர்ச்சி

மத்திய சுற்றுலாத்துறை அமைச்சர் பகத் தமிழக சுற்றுலா வளர்ச்சியில் மிகவும் ஆர்வத்துடன் இருக்கிறார். மத்திய அரசு தமிழ்நாட்டில்பல்வேறுசுற்றுலா வளர்ச்சி திட்டங்களுக்கு ரூபாய் 1½கோடி ஒதுக்கி உள்ளது. இந்த நிதியில் செங்கற்பட்டு மாவட்டத்துக்கு 86 லட்சத்து40 ஆயிரம் ரூபாய் செலவிடப்படும் இதில் காஞ்சிபுரம் நடுத்தர மக்கள் தங்கிச் செல்ல "யாத்திரி நிவாஸ்" என்ற தங்கும் விடுதி 34 லட்ச ரூபாய் செலவில் கட்டப்படும் முட்டுக்காடு சுற்றுலாவளர்ச்சிக்கு 6லட்சத்து 30 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது

ஏற்கனவே பிச்சாவரத்திற்கு ஒதுக்கிய நிதியில் ரூபாய் 4 லட்சத்து 59 ஆயிரம் மீதி இருக்கிறது. மத்திய அரசு 5 லட்சம் ரூபாய் ஒதுக்கி இருக்கிறது.

இந்த நிதியுடன் தமிழக அரசின் இந்த ஆண்டு நிதி ஒதுக்கீட்டையும் சேர்த்து மொத்தம் 20லட்சம்ரூபாய் கையிருப்பில் உள்ளதைக் கொண்டு பிச்சாவரம் சுற்றுலா வளர்ச்சி திட்டங்களை செயல்படுத்த உள்ளோம், தெ. ஆ. மாவட்டத்திற்கு இந்த ஆண்டு நிதி ஒதுக்கீடு ரூபாய் 13 லட்சத்து 17 ஆயிரமும். திருச்சி மாவட்டத்திற்கு 5 லட்சத்து 5 ஆயிரம் ரூபாயும், ஊட்டிக்கு 6 லட்சத்து66 ஆயிரம் ரூபாயும், நெல்லை மாவட்டத்திற்கு 5லட்சத்து 44 ஆயிரம் ரூபாயும். கன்னியாகுமரிக்கு 13 லட்சத்து 36ஆயிரம் ரூபாயும், ராமேஸ்வரத்துக்கு 18 லட்சத்து 45 ஆயிரம் ரூபாயும் கொடுக்கப்படும்.

### நிதி ஒதுக்கீடு செய்க

தனித்தனியாக பிரித்து மத்திய அரசு தமிழ்நாட்டின் சுற்றுலா திட்டங்களுக்கு பணம் கொடுக்கிறது. தமிழ் நாட்டில் சுற்றுலா வளர்ச்சிக்கு மத்திய அரசு தமிழக அரசு தயாரித்து அளித்துள்ள பெரிய திட்டங்களுக்குமாஸ்டர்பிளான்கள் அங்கீகாரம் அளித்து நிதி ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்று வலியுறுத்தி வருகிறோம்.

தமிழக அரசும் இந்த ஆண்டு பல்வேறு சுற்றுலா வளர்ச்சித் திட்டங்களுக்கு 1 கோடியே 48 லட்சத்து 53 ஆயிரம் ரூபாய் ஒதுக்கி உள்ளது, ஊட்டி கன்னியாகுமரி, இராமேஸ்வரம், தென்னாற்காடு, வடஆற்காடு. தர்மபுரி. சேலம் கொடைக்கானல் ஆகிய பகுதிகளில் இந்த நிதி செலவிடப்படும்.

சந்தனக்கட்டை ஏற்றுமதிக்கு மத்திய அரசு விதித்திருந்த தடையை 2 ஆண்டுகளுக்கு முன் சில மாற்றங்களுடன் நீக்கியது. மீண்டும் தடை விதிக்க வேண்டும் என்று உத்தர பிரதேசம், கர்நாடக மாநிலங்கள் வலியுறுத்துவதாக தெரிகிறது.

தமிழக அரசு காடுகள் வளர்ப்புக்கு 30 கோடி ரூபாய் செலவிடுகிறது. அதில் இருந்து வருமானம் 12 கோடி ரூபாய் தான் கிடைக்கிறது. அது சந்தனக்கட்டை ஏற்றுமதி மூலம தான் வருகிறது. ஏற்றுமதியை தடைசெய்ய மத்திய அரசு ஒப்புக்கொள்ளக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

பேட்டியின் போது அமைச்சர் வி. வி. சுவாமிநாதன், மாவட்ட ஆட்சித் தலைவர் ஆர். சி. பண்டா. சுற்றுலாத்துறை இயக்குநர் ராஜ்குமார் ஆகியோர் உடன் இருந்தார்கள்

# பயங்கரவாதிக்கு ரூபாய் 4 லட்சம அபராதம்

ஹாமில்ட்டன், ஜூன் 29—புதுடெல்லியில் உள்ள இந்திய பார்லிமெண்ட் கட்டிடத்துக்கு வெடி வைக்க சதிதிட்டம் தீட்டியதாக 7 சீக்கிய பயங்கரவாதிகள் மீது கனடாவில் வழக்கு தொடரப்பட்டது தெரிந்ததே.

இந்தியாவுக்கு எதிரான பல்வேறு சதித்திட்டங்களில் ஈடுபட்டதாகவும் கனடா போலீசார் அவர்கள் மீது குற்றம் சுமத்தினர்.

வழக்கை விசாரித்த நீதிபதி அவர்களில் 4சீக்கிய பயங்கரவாதிகளுக்கு தலா 4லட்சம் ரூபாய் அபராதம் விதித்து தீர்ப்பளித்தார்.

# பஞ்சாபில் வன்முறை: சர்வகட்சி கவலை

சண்டிகார், ஜூன் 29—பஞ்சாபில் நடக்கும் பயங்கர வன்முறை சம்பவங்கள் குறித்து நேற்று சண்டிகரில் நடைபெற்ற சர்வகட்சிக் கூட்டத்தில் ஆழ்ந்த கவலை தெரிவிக்கப்பட்டது.

மக்கள் அனைவரும் ஒருங்கிணைந்துவாழ்வதற்கான தீவிர நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு மத்திய, மாநில அரசுகளை அந்தக் கட்சிகள் வலியுறுத்தின.

# எழும்பூரிலிருந்து செல்லும் ரயில் நேரங்களில் மாற்றம் 1-ந்தேதி முதல் அமல்

சென்னை, ஜூன் 29- சென்னை எழும்பூரிலிருந்து புறப்படும் ரயில் நேரங்களில் மாறுதல் செய்யப்பட்டுள்ளது. இந்த மாற்றம் நாளை மறுநாள் (1ந் தேதி) முதல் அமலுக்கு வருகிறது.

கடந்த ஆண்டு நவம்பர் மாதம் பெய்த பெருமழையால் மதுராந்தகம்ஏரி உடைந்து கிளியாறுபாலம் அடித்துச் செல்லப்பட்டது பின்னர் அங்கு தற்காலிக பாலம் அமைக்கப்பட்டதால் ரயில்கள் மெதுவாக சென்றன. இதனால் எழும்பூரிலிருந்து புறப்படும் ரயில்கள் முன்பிருந்த நேரத்தை விட சற்று முன்னதாகவே புறப்பட்டன. இப்போது அந்தப் பாலம் சரி செய்யப்பட்டு விட்டதால் முன்பு போல் ரயில்கள் அந்தப்பாலத்தில் வேகமாக செல்லலாம் என ரயில்வே நிர்வாகம் கூறியது. இதையடுத்து ரயில்கள் புறப்படும் நேரங்களில் மாறுதல் செய்யப்பட்டுள்ளது.

இந்த மாறுதல் ஜூலை 1ந்தேதி முதல் அமலுக்கு வருகிறது. நெல்லை எக்ஸ்பிரஸ் மாலை 5,20க்கும். முத்துநகர் எக்ஸ்பிரஸ் மாலை 4.15க்கும். திருச்சி மலைக்கோட்டை எக்ஸ்பிரஸ் இரவு 9-45 மணிக்கும், பாண்டியன் எக்ஸ்பிரஸ் இரவு 7.25 மணிக்கும், கொல்லம் மெயில் மாலை 6-15 மணிக்கும், சோழன் எக்ஸ்பிரஸ் காலை 9-15 மணிக்கும், பல்லவன்எக்ஸ்பிரஸ் பகல் 3-15 மணிக்கும். வைகை எக்ஸ்பிரஸ் பகல் 12-30 மணிக்கும் சென்னையிலிருந்து புறப்படுகின்றன.

சேது எக்ஸ்பிரஸ் மாலை 4-45 மணிக்கும், ராமேசுவரம் பாசஞ்சர் பகல் 11-45 மணிக்கும். செங்கோட்டை பாசஞ்சர் இரவு 8.45 மணிக்கும் புறப்படுகின்றன.

தாம்பரத்திலிருந்து திருச்சி செல்லும்பாசஞ்சர் காலை 9.05 மணிக்கு தாம்பரத்திலிருந்து புறப்படுகிறது.

# இயங்கும் கண் உள்ள இயந்திர மனிதன்

டல்லஸ், ஜூன் 29— 'ரோபோத்' எனப்படும் இயந்திர மனிதனுக்குக் 'கண்' கொடுத்துள்ளனர் அமெரிக்க விஞ்ஞானிகள் சாதாரண மனிதர்களின் கண் பார்வையைப் போலவே இது உள்ளது என்பதுதான் இதன் தனிச் சிறப்பாகும்.

எதிரே இருக்கும் ஒரு பொருளைப் பார்க்க முடிவதுடன் அது எவ்வளவு தூரத்தில் உள்ளது என்பதை நிதானித்து அறியவும் இதனால் சாத்தியமாகும். அதனையடுத்து அந்தப் பொருளை நெருங்குவது பற்றியோ அல்லது எடுப்பது பற்றியோ இந்த 'ரோபோத்' தீர்மானிக்க முடியும்.

ரோபோத்தின் தலைப் பகுதியில் இரு வீடியோ காமிராக்கள் வைக்கப்பட்டுள்ளன; இந்த இரு காமிராக்கள் மூலம் பெறப்படும் காட்சியை, இதிலுள்ள ஒரு கம்ப்யூட்டர் ஒருங்கிணைக்கிறது. 10 வினாடிகளில் இந்த வேலை முடிந்து விடுகிறது; இதன் மூலம், சாதாரண மனிதர்களைப் போன்ற பார்வையை. ரோபோத் பெற முடிகிறது.

இத்தகைய 'கண்' படைத்த ரோபோத்களை விண்வெளியில் விண்கலங்களை இணைக்கும் பணியிலும், கடலுக்கு அடியில் செலுத்தப்படக்கூடியவாகனங்களிலும் பயன்படுத்த முடியும்.

# காதலி அடித்துக் கொலை காதலன் உட்பட 4 பேர் சரண்

வேலூர், ஜூன். 29— காதலியை அடித்துக் கொன்றதாக காதலன் உட்பட 4பேர் சரண் அடைந்தனர்.

காட்பாடி அருகே உள்ள கம்பம் என்ற ஊரைச் சேர்ந்தவர் சுந்தர மூர்த்தி வயது 35. பள்ளிக்கூட ஆசிரியர் அவரது மனைவி சந்திரா.

சுந்தரமூர்த்திக்கும் விஜயகாந்தி (வயது 25) என்ற ஆசிரியைக்கும் காதல்ஏற்பட்டது. இதை அறிந்த சந்திரா அவரது தாயார் மாணிக்கம்மாள் மற்றும் அவர்களது உறவினர் ஆகியோர் விஜயகாந்தியை தீர்த்துக்கட்ட முடிவு செய்தனராம்.

காதலன் சுந்தரமூர்த்தியும் மற்றவர்களும் சேர்ந்து விஜயகாந்தியை அடித்துக் கொன்று ரயில் தண்டவாளத்தில் போட்டு ரயில் விபத்துஎன்று திசைதிருப்ப முயற்சி செய்தனராம் ரயிலில் அடிபட்ட விஜயகாந்தி உடலை சுந்தரமூர்த்தி நிலத்தில் அடக்கம் செய்தனராம்.

விஜயகாந்தி மரணத்தில் அவரது சகோதரருக்கு சந்தேகம் ஏற்பட்டது. இது பற்றி போலீசில் புகார் செய்தார்.

போலீசார் புலன் விசாரணை நடத்தி சுந்தரமூர்த்தி உட்பட 4 பேரை தேடி வந்தனர். 4 பேரும் சரண் அடைந்தார்கள். அவர்களில் இருவர் பெண்கள். அவர்கள் ஜாமீனில் விடப்பட்டனர்.

# மாண்புமிகு தமிழக முதல்வர்
# இதய தெய்வம்
# புரட்சித் தலைவர் அவர்களின்
# பொற்கால ஆட்சியில்



## தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தின்



## 9 ஆண்டு கால சாதனைகள்

பயன் பெற்ற நகரம் மற்றும் கிராமங்கள்—22933
பயன் பெற்ற மக்கட் தொகை—180.50 இலட்சங்கள்
செலவான தொகை—ரூ. 285.50 கோடி





எங்கள் மன்னன் இதய தெய்வம்
புரட்சித் தலைவர் பொன்மனச் செம்மலின்
பொற்கால ஆட்சியில்
கிராமங்கள் தோறும் குடிநீர் வசதிகள்
நகரங்கள் தோறும் குடிநீர் இணைப்புகள்
தமிழகம் முழுமைக்கும் உன்னத திட்டங்கள்
சோதனைகள் அனைத்தும் சாதனைகளாக்கி
சரித்திரம் படைத்த தங்கத் தமிழ் மகன்
அவர் தொட்டது துலங்கும் நினைத்தது நடக்கும்
அவர் இட்ட ஆணையை சிரமேற்கொண்டு
சிறப்புடன் பணியாற்ற இனியும்
விரைந்து விழையும் எங்கள் வாரியம்.

இவண்
எஸ்.டி. உகம்சந்த் பி.எஸ்.சி
தலைவர்

தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம்,
31, காமராசர் சாலை, சேப்பாக்கம், சென்னை-600 005.

Efficient/ 27852/939

## பேராவூரணி அருகே புதிய அணைக்கட்டு

பேராவூரணி, ஜூன். 29— பேராவூரணி அருகே ரூபாய் 50 லட்சம் செலவில் புதிய அணை கட்டப்படுகிறது.

தஞ்சை மாவட்டம் பேராவூரணியை அடுத்த மடத்துக்காடு கிராமத்தில ரூபாய் 47.60 லட்சம் செலவில் அக்னி ஆற்றின் குறுக்கே கட்டப்படவிருக்கும் புதிய அணைக்கட்டின் அடிக்கல் நாட்டுவிழா சிறப்பாக நடைபெற்றது.

இவ்விழாவில் கலந்து கொண்டு அணைக்கட்டுக்கு அடிக்கல நாட்டி, சிறப்புரையாற்றிய அமைச்சர் கோவேந்தன் குறிப்பிட்டதாவது:

"இந்த அணைக்கட்டின் இடது புற வாய்க்கால் மூலம் 12 ஏரிகள் பயன் பெற இருக்கின்றன அதன மூலம் 3565 ஏக்கர் நிலம் பாசன வசதி பெறுகின்றன, வலது புற வாய்க்கால் மூலம் 2 ஏரிகள் பயனடைகின்றன. 400 ஏக்கர் நிலம் பாசன வசதி பெறும்

இதைப்போல ரூபாய் 385 செலவிலான 43 நடுத்தர சிறுபாசன சிறப்பு சிறு பாசனத்திட்டங்களை நிறைவேற்றும் செயற் குறிப்பு அரசின் பரிசீலனையில் உள்ளது மழையை நம்பியிருக்கும் 150 ஏரிகளை நவீனப்படுத்தும் திட்டம் ரூபாய் 27 6 கோடி செலவில் ஐரோப்பிய பொருளாதார குழுமத்தின் உதவியுடன் செயல் படுத்தப்படுகிறது ரூபாய் 366.60 கோடி செலவில் காவிரி டெல்டாவை நவீனப்படுத்தும் திட்டமும் உருவாக்கப்பட்டுள்ளது. இவ்வாண்டு கூடுதலாக 17 ஆயிரம் ஹெக்டேர் பாசன வசதி பெறும் திட்டங்கள் செயல்படுத்தப்பட விருக்கின்றன.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் குறிப்பிட்டார் மற்றும் இவ்விழாவில் பேராவூரணி ஊராட்சி ஒன்றியப் பெருந் தலைவர் செருவை ப. மலையப்பன், ஒன்றிய கழக செயலாளர் ஆர். சுந்தரம். முன்னாள்பெருந் தலைவர், என். வைரவன் சேர்வை. ஊராட்சிமன்றத் தலைவர்கள திருச்சிற்றம்பலம் கோவிந்தராசன். இடையாத்தி - ஜெயவேல் களத்தூர் சிவலிங்கம், பாலத்தளி துரை மாணிக்கம், புனவாசல்- வீரையன், குறிச்சி-கணேச மூர்த்தி, மடத்திக்காடு சிவசாமி, மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

பொதுப்பணித் துறை செயற்பொறியாளர் இ. நடராசன் நன்றி கூறினார்

## நிர்வாகிகள் கூட்டம்

சென்னை, ஜூன் 29 | அயன்புரம் 57வது வட்டம் மாபன்னர் எம் ஜி ஆர் சமநீதிமன்றம் நிர்வாகிகள் கூட்டம் ஜி செல்வம் தலைமையில் 22 ஏ பிளாக்கில் நடைபெறுகிறது இக்கூட்டத்தில் செயலாளர் வேலாண்டி - மாரியப்பன் ஆகியோர் கலந்து கொள்கிறார்கள்

## புரட்சித்தலைவர் நீடூழி வாழ கோவிலில் சிறப்பு வழிபாடு

திருநெல்வேலி. ஜூன் 29— தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் நீண்ட ஆயுளுடன் வாழ நெல்லை மாவட்ட கழகச் செயலாளர் கருப்பசாமி பாண்டியன் நெல்லை டவுனில் உள்ள நெல்லையப்பர்— காந்திமதி அம்பாள் கோவிலில சிறப்பு பூஜை வழிபாடு நடத்தினார் பின் பிரசாதங்களை முதல்வர் புரட்சித் தலைவருக்கு அனுப்பி வைத்தார். சிறப்பு வழிபாட்டில் கழக தொண்டர்கள் எம்.ஜி.ஆர். மன்றத்தினர் உட்பட பொதுமக்கள் ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

## கிராம பகுதிக்கு பேருந்து வசதி

வேலூர், ஜூன் 29— மாதனூர் ஊராட்சி ஒன்றிய தலைவர் கு. பாண்டுரங்கன் முயற்சியால் ஆம்பூரில் இருந்து குருவராஜபாளையத்திற்கு டவுன் பஸ் விடப்பட்டுள்ளது.

மாதனூர் மற்றும் அதனை சுற்றியுள்ள கிராம மக்களின் வசதிக்காக ஆம்பூரிலிருந்து குருவராஜபாளையத்திற்கு டவுன் பஸ் விட வேண்டுமென்று மாதனூர் ஒன்றிய தலைவர் கு பாண்டுரங்கன் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார்.

இதன் பலனாக ஆம்பூரிலிருந்து குருவராஜபாளையத்திற்கு கடந்த 21ந்தேதி முதல் பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழக டவுன் பஸ் விடப்பட்டு ஓடிக்கொண்டிருக்கிறது.

## இராமநாதபுரத்தில் மக்கள் குறை கேட்கும் நாள்

இராமநாதபுரம், ஜூன் 29— மாவட்ட அளவிலான மக்கள் குறை தீர்க்கும் நாள் இராமநாதபுரத்தில் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தில் நடைபெற்றது. மக்களின் குறைகளை மாவட்ட ஆட்சித் தலைவர் தேவேந்திரநாத சாரங்கி நேரிடையாக கேட்டறிந்தார்.

53 நபர்கள் மாவட்ட ஆட்சித் தலைவரிடம் தங்களின் குறைகளை சொல்லி மனுக்களை கொடுத்தார்கள் அந்த மனுக்களை பரிசீலனை செய்து அதன் மீது உரிய நடவடிக்கை உடனடியாக மேற்கொள்ளுமாறு மாவட்ட ஆட்சித்தலைவர் அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்.

# முக்கிய அறிவிப்பு
# தமிழ்நாடு பரிசுச் சீட்டு திட்டம்

## சாதாரண மற்றும் பாரிவள்ளல் குலுக்கல் நாட்களில் மாற்றம்

1986-ம் ஆண்டு ஜூலை மாதம் முதல் சாதாரண பரிசுச்சீட்டு குலுக்கல்கள் பிரதி புதன்கிழமைகளிலும், பாரி வள்ளல் பரிசுச்சீட்டு குலுக்கல் பிரதி ஞாயிறுதோறும் நடைபெறும்.

இயக்குநர்
தமிழ்நாடு பரிசுச்சீட்டு திட்டம் சென்னை

EL24587

# பொ.ப.து
# டெண்டர் அறிவிப்பு

எண் 4 SBC MS 86 87 ஒப்பந்த விவரம் மொத்த தொகை

தமிழ்நாடு அரசு ஆளுநர் அவர்கள் சார்பில், அவர்களுக்காக கீழ்காணும் வேலைக்கான முத்திரையிட்ட டெண்டர்கள், கண்காணிப்புப் பொறியாளர் அலுவலகம் பொதுப்பணித்துறை ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், சேப்பாக்கம் சென்னை-600005 அவர்களால் கீழே ஒவ்வொன்றுக்கு எதிராக குறிப்பிடப்பட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3 மணிவரை பெற்றுக்கொள்ளப்பட்டு அதே தினம் பிற்பகல் 3.15 மணிக்கு கண்காணிப்பு பொறியாளர் பொதுப்பணித்துறை ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள் சென்னை அவர்களால் அவரது அலுவலகத்தில் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டேவணித் தொகை டெபாசிட் @ 1% | முடிக்க வேண்டிய காலம் | டெண்டர் கோரும் தகுதி பெற்ற ஒப்பந்தக்காரர்களின் பதிவு வகுப்பு | டெண்டர் பெறும் கடைசி தேதி | டெண்டர் விற்கப்படும் தேதி |
|---|---|---|---|---|---|---|
| | | ரூ | | | | |
| 1. | காஞ்சிபுரத்தில்யாத்ரி நிவாஸ் கட்டுதல். | 24 400/- | 9 மாதம் | Iவது வகுப்பு | 23-7-86 | 11-7-86 முதல் 21-7-86 வரை |
| 2. | திருத்தணியில் வழிப்புற (Way Side) வசதிகள் கட்டுதல். | 2,900/- | 6 மாதம் | IIவது வகுப்பு | 23-7-86 | 11-7-86 முதல் 21-7-86 வரை |
| 3. | திருக்கழுக்குன்றத்தில் வழிப்புற (Way Side) வசதிகள் கட்டுதல்: | 2,900/- | 6 மாதம் | IIவது வகுப்பு | 23-7-86 | 11-7-86 முதல் 21-7-86 வரை |
| 4. | கீழ்காணும் ஊர்களில் பயிற்சி மற்றும் தங்குவதற்கான கட்டிடங்கள் கட்டுதல் | | | | | |
| | a) செங்கல்பட்டு | 4,500/- | 6 மாதம் | IIவது வகுப்பு | 22-7-86 | 11-7-86 முதல் 20-7-86 வரை |
| | b) திருப்பெரும்புதூர் | 4,500/- | 6 மாதம் | IIவது வகுப்பு | 22-7-86 | 11-7-86 முதல் 20-7-86 வரை |
| | c) திருத்தணி | 4,500/- | 6 மாதம் | IIவது வகுப்பு | 22-7-86 | 11-7-86 முதல் 20-7-86 வரை |
| | d) பொன்னேரி தாலுக்காவிலுள்ள சின்னக் காவரம் கிராமம் | 4,500/- | 6 மாதம் | IIவது வகுப்பு | 22-7-86 | 11-7-86 முதல் 20-7-86 வரை |

செலுத்தப்படவேண்டிய டேவணித் தொகை : 1 முதல் 4 ஏ பி சி வரை — செயற்பொறியாளர், பொ. ப. து பில்டிங் டிவிஷன் காஞ்சிபுரம்.

வரிசை எண் 4 டிக்கு : பில்டிங்ஸ் டிவிஷன் சென்னை-5

பொதுப்பணித்துறை, மற்றும் இதர அரசு இலாகாக்களிலும் மத்திய மாநில அரசு நிறுவனங்களிலும் மேலே பகுதி 5ல் குறிப்பிட்டபடி அந்த வகுப்புகளில் பதிவு செய்துள்ள காண்ட்ராக்டர்களுக்கு டெண்டர்கள் வழங்கப்படும். மேலும் குறிப்பிட்ட வகுப்பிற்கு ஒரு நிலை குறைவாக பதிவு பெற்றுள்ள காண்ட்ராக்டர்களுக்கும் டெண்டர் குறிப்புகள் வழங்கப்படும். அவர்கள் இந்த வேலைகள் பெறுவதில் வெற்றிபெற்றால் அவருக்கு அந்த வேலை அளிக்கப்படுவதற்கு முன்னதாக, பொதுப்பணித்துறையில் உரிய வகுப்பில் தன்னை பதிவு செய்துக்கொள்ளவேண்டும்.

வரைபடங்களுடன் கூடிய டெண்டர் பத்திரங்களின் விலை, விற்பனை வரி சர்சார்ஜ் சேர்த்து ஒவ்வொரு வேலைக்கும் ரூ. 79,15 ஆகும். எக்காரணத்தைக் முன்னிட்டும் திருப்பியளிக்கப்படமாட்டாது டெண்டர் பத்திரங்களுக்கான விலையை. சம்பந்தப்பட்ட செயற்பொறியாளரின் சார்பில் டிமாண்ட் டிராப்டாக மட்டுமே ஏற்றுக்கொள்ளப்படும்.

டேவணித் தொகை டெபாசிட் ஏதாவது ஒரு வகை செக்யூரிட்டியாக மட்டுமே (பாங்க் கியாரண்டி நீங்கலாக) ஏற்றுக் கொள்ளப்படும். சிறுசேமிப்பு பத்திரம் டெபாசிட் கணக்குகள் ஆகியவை குறுகியகால செக்யூரிட்டிகளாக இருப்பின் அதாவது டெண்டர் இறுதி முடிவு செய்யப்படும் காலம்வரை செல்லுபடியாகக் கூடியதாக இருந்தால் அவைகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

மேற்படி வேலைக்கான டெண்டர் பத்திரங்கள் இதர விவரங்கள் ஆகியவை கண்காணிப்புப் பொறியாளர் அலுவலகம் பொதுப்பணித்துறை ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள், சென்னை அவர்களின் அலுவலகத்திலிருந்து எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரங்களில் பெற்றுக் கொள்ளலாம். டெண்டர் பத்திரங்களை தபாலில் பெற விரும்பும் வேண்டுகோள்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

எக்காரணத்தை முன்னிட்டாவது டெண்டர் திறக்கப்படும் தேதி அரசு விடுமுறையாக அறிவிக்கப்பட்டால் டெண்டர் அதற்கு அடுத்த வேலை நாளன்று பெற்றுக் கொள்ளப்பட்டு அதேதினம் பிற்பகல் 3-15 மணிக்கு திறக்கப்படும்.

கண்காணிப்புப் பொறியாளர்
பொதுப்பணித்துறை
ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள்
சென்னை—5

IPR-24093-86-20 maa

# புரட்சித்தலைவருக்கு விவசாயிகள் நன்றி

கள்ளக்குறிச்சி, ஜூன் 29— விவசாயிகளின் நலனுக்குப் பாடுபடுவது போல பேசிஅரசியல் லாபம் தேட தி.மு.க. முயலுகிறது என தென் ஆற்காடு மாவட்ட விவசாயிகள் சங்க இணைச் செயலாளர் வி எம். ஜெயராமன் தெரிவித்துள்ளார்.

அண்ணா தொழிற்சங்க பேரவையின் விவசாயப் பிரிவின் தென் ஆற்காடு மாவட்ட இணைச்செயலாளர் வி எம் ஜெயராமன் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:-

மின்கட்டணத்தை சில பைசாக்கள் குறைக்கக் கோரிய விவசாயிகள் மீது துப்பாக்கிசூடு நடத்திய திமுகவினர் தற்போது அரசியல் சுயலாபம் கருதிபொய் பிரச்சாரத்தில் ஈடுபட்டு வருகின்றனர்.

விவசாயிகளுக்கு கடன் ரத்து வரிதளளுபடி. இலவச மின்சாரம், விவசாயத் தொழிலாளர்களுக்கு காப்புறுதி திட்டம் போன்றவைகளை அமல்படுத்திய அரசு புரட்சித்தலைவர் அரசு தான்

தற்போது தமிழ்நாடு முழுவதும் ஜப்தி நடவடிக்கைகளை நிறுத்தி வைக்கவும் முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார். இதற்காக முதல்வர் புரட்சித்தலைவருக்கு விவசாயிகள் நன்றி தெரிவிக்கிறோம்

இவ்வாறு ஜெயராமன் தெரிவித்துள்ளார்

## இராமநாதபுரத்தில் மாவட்ட தொழில் மையம்

இராமநாதபுரம், ஜூன் 29 மதுரையில் செயல்பட்டு வந்த இராமநாதபுரம் மாவட்டத் தொழில்மையம் இராமநாதபுரம் வண்டிக்காரத்தெரு 376ம் நம்பர் கட்டிடத்தில் செயல்படுகிறது என்று மாவட்ட ஆட்சித்தலைவர் தேவேந்திரநாத் சாரங்கி தெரிவித்துள்ளார்

மே பொ.(பா)து பொ.ப.எண். அ3/1528/86-

# சென்னை மாநகராட்சி

மேற்பார்வை பொறியாளர் (பாலம்) துறை
பொது பண்டகசாலை

## குறுகிய கால ஒப்பஅறிவிப்பு

கீழே குறிப்பிட்ட ஒப்பந்தத்திற்காக தனித்தனியே மூடி அரசுக்கு முத்திரையிட்ட ஒப்பங்கள் கீழே குறிப்பிட்டுள்ள ஒப்பவைப்புத் தொகை செலுத்தியதற்கான மாநகராட்சி கருவூல சீட்டு அல்லது தேசியமயமாக்கப்பட்ட வங்கி பணவிடையுடன் குறிப்பிட்ட நமூனாவில் 11—7—86 அன்று பிற்பகல் 3.00 மணிவரை சென்னை மாநகராட்சி மேற்பார்வை பொறியாளர் (பாலம்) அவர்களால் பெற்றுக் கொள்ளப்படும்.

உறையின் மீது பொது பண்டகசாலை 1986 87 ஆம் ஆண்டிற்கான சாமான்கள் வழங்குதல் சம்பந்தமாக தேதி 11-7-86 எனக் குறிப்பிட வேண்டும்.

ஒப்ப நமூனா மற்றும் இதர விபரங்கள் அடங்கிய பிரதிகள் இரண்டிற்கு பிறகு ரூ 50/- வீதம் ரொக்கமாக செலுத்திரிப்பன் கட்டிடத்தில் உள்ளவிசாரணை அலுவலகத்தில் பெற்றுக் கொள்ளலாம் ஒப்பநமூனாக்களின் விற்பனை 9 7-86 அன்று பிற்பகல் 2.00 மணி அளவில் நிறுத்தப்படும்.

| பாகம் 1 | பொருள்களின் விபரங்கள் 2 | ஒப்பவைப்புத் தொகை 3 |
|---|---|---|
| 1. | ஆர்.டி.எஸ் 10 மி.மீ 80 டன் | 18, 000/ |
| 2. | ஆர்.பி.எஸ் 16 மி.மீ 20 டன் | |

(ஒப்பம்) க ர மனோகரன் B E
மேற்பார்வை பொறியாளர் (பாலம்)

எங்கள் இதயதெய்வம் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் **புரட்சித்தலைவர்** அவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்று 10-ம் ஆண்டு துவங்கும் இந்நன்னாளில் வாழ்த்தி வணங்குகிறோம்.

●★ இவண் ★

ஏ. என். குப்புசாமிசெட்டி, பூ ப த. ஜி எஸ் பாபு, 56 வ செ, ஜே. குமார், பூ. ப. செ, எ. செல்வராஜ், 56 வ. செ. பெசு குமார், பூ ப, து செ, இ. மாதவன், 56 வ. து. செ. த. கிருஷ்ணன் பூ ப பா. எம். தனசேகரன், கே. ஏ. இராதாகிருஷ்ணன், கே. மணி. எஸ். நாராயணன், எஸ். உதயகுமார்

பூங்காநகர் பகுதி, சென்னை

# ஆலந்தூர் நகர

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்தின் சார்பில் இதயதெய்வம் மாண்புமிகு தமிழகமுதல்வர் பரங்கிமலைபாரிவள்ளல் டாக்டர்

# புரட்சிதலைவர்

அவர்களின் ஆட்சியின் 10-வது ஆண்டு தொடக்கவிழாவை யொட்டி

ஆலந்தூர் நகர் முழுவதும் கழக கொடியேற்றி

## 5000 பேர்களுக்கு உணவு வழங்கும்

நிகழ்ச்சி நடைபெறுகிறது

இடங்கள்: ஆலந்தூர் விக்டோரியா தியேட்டர்
ஆதம்பாக்கம் ஈஸ்வரன் கோயில்திடல்
பழவந்தாங்கள் வேம்புலி அம்மன் கோயில திடல்

உணவு வழங்குபவர் மாண்புமிகு **ஆனூர் ஜெகதீசன்** அவர்கள்
(தமிழக ஊரக தொழில் அமைச்சர்)

நாள்: 30-6-86 திங்கள் காலை 11 மணி

மாலை 6 மணி அளவில் ரங்கா திரையரங்கம் அருகில்

மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெறும்
அனைவரும் வருக! வருக!!





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-600029.

# மக்கள் தேவைக்கேற்ப சேவை. அதுவே சென்னை குடிநீர்.



- சென்னைப் பெருநகர் குடிநீர் வழங்கல் கழிவு நீரகற்று வாரியம் 1.8.1978 அன்று சட்டப்படி தமிழக அரசின் பொதுத்துறை நிறுவனமாக அமைக்கப்பட்டது.

**இதன் நோக்கம் :**

- சென்னைப் பெருநகர் பகுதியின் பொதுச் சுகாதாரத்தை பேணிக் காத்து நகர மக்களின் வளர்ந்து வரும் தேவைகளைக் கவனித்து குடிநீர் வழங்குதல் மற்றும் கழிவு நீரகற்றுதல் ஆகியவையே ஆகும்.
- இவ்வாரியம் தொடங்கி எட்டு ஆண்டுகளுக்குள் சேவை மனப்பான்மையில் திறம்படப் பணி புரிந்து மக்கள் மனதில் நீங்கா இடம் பெற்றுள்ளது.

1981 முதல் 1983 வரையிலான 3 ஆண்டுகள் நிலவிய கடுமையான வறட்சி நிலைமையை இவ்வாரியம் ரூ. 10 கோடி செலவிட்டு வெற்றிகரமாக சமாளித்தது.

**நிதி :**

மாநில அரசின் உதவியோடு பல்வேறு திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டு குடிநீர் பிரிவின் கீழ் ரூ. 37.84 கோடி செலவில் ஒப்புதல் அளிக்கப்பட்டு 31 திட்டங்களில் 18 திட்டங்களும் கழிவு நீரகற்று பிரிவின் கீழ் ரூ. 33.53 கோடி செலவில் ஒப்புதல் அளிக்கப்பட்டு 21 திட்டங்களில் 7 திட்டங்கள் முடிக்கப்பட்டுள்ளன.

**உலக வங்கித் திட்டம் :**

நிலத்தடி நீரை எடுத்து குடிநீர் வழங்கும் திட்டத்திற்கு தமிழக அரசு ரூ. 15 கோடி வழங்கி ஆழ்துளை கிணறுகள் போடப்பட்டுள்ளன.

மேலும் ரூ. 136 கோடி உலக வங்கித் திட்டம் செயல்படுத்திட தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.



டாக்டர் கா. காளிமுத்து
மாண்புமிகு
வேளாண்மை மற்றும் குடிநீர்
வழங்கல் துறை அமைச்சர்.

MADRAS METROPOLITAN WATER SUPPLY AND SEWERAGE BOARD
METRO WATER
மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்

WATER ANALYST

Metro Water

**குடிநீர் வழங்குதல் :**

1978-ம் ஆண்டு நாளொன்றுக்கு வழங்கப்பட்ட குடிநீர் சராசரியாக 48 மில்லியன் காலன் (215 Mld.) பயன் பெற்றோர் — 26.39 இலட்சம் மக்கள்.
பல்வேறு திட்டங்களை நிறைவேற்றியதால் இன்று நாளொன்றுக்கு வழங்கப்படும் குடிநீர் சராசரியாக 54 மில்லியன் காலன் (245 Mld.) பயன் பெறுவோர் 33.35 இலட்சம் மக்கள்.

இதைத் தவிர மீஞ்சூர், பஞ்சட்டி, தாமரைப்பாக்கம் ஆகிய இடங்களில் உள்ள கிணறுகளிலிருந்து நாள் ஒன்றுக்கு 53 மில்லியன் லிட்டர் தண்ணீர் எடுக்கப்பட்டு மணலி மற்றும் எண்ணூர் அனல் மின் நிலையப் பகுதிகளில் குடிநீர் வழங்கப்பட்டு வருகிறது.

1978ம் ஆண்டில் 12 ஊராட்சிகள் சென்னை மாநகரோடு இணைக்கப்பட்டு, திருவான்மியூர், கோடம்பாக்கம், சாலிக்கிராமம் பகுதிகளுக்கு குடிநீர் வழங்கப்படுகிறது. மேலும் கொடுங்கையூர், எருக்கஞ்சேரி, வில்லிவாக்கம், ஆகிய பகுதிகளுக்கும் குடிநீர் விரைவில் வழங்கப்படும்.

**கழிவு நீரகற்றல் :**

சென்னைப் பெருநகர் 5 மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு மண்டலத்திலும் கழிவுநீர் சுத்திகரிக்கப்பட்டு அந்நீர் புல் வளர்ப்புக்குப் பயன்படுத்தப்படுகிறது.
1978ம் ஆண்டு நிலவரப்படி கழிவு நீரகற்று நிலையங்களின் திறன் நாள் ஒன்றுக்கு 190 மில்லியன் லிட்டராகும்.
ஆனால் இப்பொழுது பல்வேறு திட்டங்களை மேற்கொண்டதால் ஏற்பட்டுள்ள திறன் 220 மில்லியன் லிட்டராகும்.
மேலும் புதிதாக 6 கழிவு நீரேற்று நிலையங்கள் கட்டப்பட்டுள்ளன. பெருங்குடி, கோயம்பேடு ஆகிய இடங்களில் கழிவுநீர் சுத்திகரிப்பு நிலையங்கள் செயல்படத் தொடங்கி உள்ளன.

ரூ. 12 கோடி செலவில் சின்னமலை, வேளச்சேரி சாலை, அரும்பாக்கம், அமிஞ்சிக்கரை ஆகிய பகுதிகளில் புதியதாக கழிவு நீரகற்று அமைப்புகள் ஏற்படுத்தபட்டுள்ளன. மேலும் 10 நிலையங்கள் புதுப்பிக்கப்பட்டுள்ளன.

**தமிழ் நாடு முதலமைச்சரின் ''சத்துணவுத் திட்டம்''**

சென்னை குடிநீர் வாரியம், சென்னை நகரில் 1609 சத்துணவு கூடங்களுக்கு குடிநீர் வசதி அளித்துள்ளது. இவற்றில் பல்வேறு கூடங்களுக்கு 671 குடிநீர் குழாய் இணைப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. குடிநீர் இணைப்பு கொடுக்கப்பட முடியாத 397 கூடங்களில் எஃகு தொட்டிகள் வைக்கப்பட்டு நாள்தோறும் லாரிகள் மூலம் அவற்றில் குடிநீர் நிரப்பப் படுகிறது. இது தவிர 395 குழாய் கிணறுகள், கழுவும் பணிகளுக்காக முடிந்த இடங்களில் நிறுவப்பட்டுள்ளன.

**கழிவு நீர் சுத்திகரிப்பு சாதனங்கள் :**

கழிவு நீரகற்றுப் பணிகளை நவீனப்படுத்துவதற்காக, ஆழமான, சிக்கலான கழிவுநீர் அடைப்புகளை அகற்றுவதற்காக ''மான்ஸ்ட்டர் 2000'' என்னும் சாதனம் ஒன்று ரூ. 40 லட்சம் செலவில் வாங்கப்பட்டுள்ளது.

**குடிசைகளுக்கு குடிநீர்—கழிவு நீரகற்று வசதி :**

இவ்வாரியம் 225 குடிசைப் பகுதிகளுக்கு குடிநீர் வசதியும் 35 குடிசைப் பகுதிகளில் கழிவு நீரகற்று வசதிகளும் செய்து கொடுத்துள்ளது.

**ஏழாவது ஐந்தாண்டுத் திட்டம் :**

ஏழாவது திட்டக்கால முடிவில் — நாள் ஒன்றுக்கு குடிநீர் சுத்தப்படுத்தப்படும் திறனளவு மேலும் 90 மில்லியன் லிட்டர் அதிகரிக்கப்படும்.

நிலநீர் திட்டத்தின் முதல் கட்டப் பணிகளை நிறைவேற்றுவதன் மூலம் சென்னைக்கு வழங்கப்படும் குடிநீரின் அளவு நாளொன்றுக்கு 55 மில்லியன் லிட்டர் அதிகரிக்கப்படும்.
கொடுங்கையூரில் அமைந்துள்ள கழிவு நீர் சுத்திகரிப்பு நிலையங்களின் திறன் மேலும் அதிகரிக்கப்படும்.
பள்ளிப்பட்டு, மேல்பட்டடை, கோட்டூர், மாம்பலம் ஏரிக்கரை, திருவான்மியூர், வில்லிவாக்கம் ஆகிய பகுதிகளில் புதிதாக கழிவு நீரகற்று வசதிகள் செய்து கொடுக்கப்படும்.

இவை மட்டுமல்ல. . . . சாதனைப் பட்டியல் இன்னும் தொடரும்.

**சென்னைப் பெருநகர் குடிநீர் வழங்கல்-கழிவு நீரகற்று வாரியம்**
1, பம்பிங் ஸ்டேஷன் சாலை, சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை-600 002.

DIPR 28263/939/86-10 (R)

# என் எண்ணமெல்லாம் அவர் புகழ் பாடும்

-: என். வி. என். செல்வம் :-

தலைவர், தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரியம்)



தமிழகத்தின் பொற்காலம் நோக்கி அழைக்கிறேன். கற்காலம் என கடந்த காலம் இருந்ததினால் புரட்சித்தலைவரின் ஆட்சிக்காலம் பொற்காலம் என்பதால் அதனை நோக்கி அழைக்கின்றேன்,

சற்று நில்லுங்கள்-இதன் வித்தியாசம் உங்களுக்கு எப்படித் தெரியும்?

சிலப்பதிகாரத்தில் ஒரு சிறு நிகழ்ச்சி. பட்டது போதும் இனி உற்றது ஏதும் உண்டோ என. கைபட்டது கொண்டு மதுரையை நோக்கி கோவலன் - கண்ணகி வழி நடை பயணம் கொண்டனர். உற்ற துணையென கவுந்தி அடிகள் அவர்கள் பட்ட துயர் நீங்கபல்கதை கூறி நடந்தனர். நீள் நெடும் பாதையில் அனிச்சமலர் போன்றவள் கண்ணகி. நெடும்பயணம் தாங்காத பனிமலர் பாதம் அவளுடையது. அது சிவந்து கண்ணியது. கோவலன் கண்களோ அது கண்டு கண்ணீர் மல்கியது. அடிகளாரை நோக்கி அவன் கேட்டான், "மதுரை இன்னும் நெடுந்தூரமோ?" கவுந்தி அடிகள் கூறினார், இல்லை இல்லை. மதுரை நெடுந்தூரம் இல்லை. இம்தா மதுரைத் தென்றல் வந்தது காணீர்! என்றார். ஏன் இதுவரை தென்றல் வீசவில்லையா - சோழ மண்டலத்தில் வீசாத தென்றலா பாண்டிய மண்டலத்தில் வீசியது' அதுவல்ல அதற்குக் காரணம், அட்டிற்புகையும் ஆகுதிப்புகையும் வேதியர் மூட்டிய கேள்வித் தீயின் புகையும் கலந்து, அம் மணம் நிறைந்த தென்றல் மதுரைத்தென்றல், இவ் வாசனைத் தற்போது வீசுவதால்-மதுரை அருகாமையில்தான் உள்ளது என அந்த ஊரின் சிறப்பால்-தென்றல் சிறப்புற்றதை அவர் அவ்வளவு நயம்பட உரைத்தார்.

## மதுரை தென்றல்

அது போன்றே இதுபோன்று ஆண்டவர்கள் காலம் என்ன காலம். அது கற்காலம், இது சோழமண்டல காற்றைப் போல திட்டங்கள், சாதனைகள் நிறைந்த ஆட்சிக் காலம் புரட்சித்தலைவரின் ஆட்சிக்காலம் இது மதுரைத் தென்றல் போல? எனவே இது பொற்காலம். இந்தப் பொற்காலம் தந்த பொன்மனச் செம்மல்-புரட்சித்தென்றல்-புதுமை நாயகன் - முப்பிறவி எடுத்து இன்றைய தமிழ்ச் சங்கம் அமைத்த தளநாயகன் புகழ்பாட - அவர் தம் புகழ் முடிவில் மேலும் அணி சேர்க்க தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரியம் அதன் அரும்பணியினை கீழ்க்கண்டவாறு செய்து வருகிறது

தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியம் 1970-ல் தோற்றுவிக்கப் பட்ட போதிலும் அது 1977 ஆம் ஆண்டு முதல் புதிய உத்வேகத்துடன் செயல்பட ஆரம்பித்தது. சென்னை மாநகரில் உள்ள குடிசைப் பகுதிகளை அகற்றி மாடிக் குடியிருப்புகள் கட்டி குறைந்தவாடகைக்கு அந்த குடிசை வாசிக்கு அளிக்க வேண்டும். அதன்படி பல குடிசைப்பகுதிகள் அகற்றப்பட்டு அப்பகுதியில் மாடிக் குடியிருப்புகள் நவீனவசதிகளுடன் கட்டப்பட்டன. அதற்குபிரதிமாதம் ரூபாய் 20/- மட்டுமே வாடகையாக நியமிக்கப்பட்டது. இதுபோன்றவீடுகள் கடந்த 1977முதல் நடப்பு ஆண்டு வரை 19262 வீடுகள்கட்டி முடிக்கப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளன. இதற்கு மட்டும் இதுவரை அஞ்கோ நிதி உதவியுடன் ரூபாய் 1795.51 லட்சம் செலவிடப் பட்டுள்ளது. கடந்த இரண்டு ஆண்டில் மட்டும் 84-86) 1960 குடியிருப்புகள் ரூபாய் 292.27 லட்சம் செலவில் கட்டி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளன. அன்று ஒரு திரைக் காவியத்தில் புரட்சித் தலைவர் அவர்கள் ஒருபாடலில் பாடினார்.

"அண்ணாந்துபார்க்கின்ற
மாளிகை கட்டி
அதன் அருகினில் ஓலை
குடிசை கட்டி
பொன்னான உலகென்று
பெயரிட்டால்
அந்த சாமி சிரிக்கும்;
இந்த பூமி சிரிக்கும்

அன்று அவர் கண்ட பொன்னான உலகைப் படைக்க குடிசைகள் அகற்றப்பட்டு மாடமாளிகைகள் கட்டப்பட்டு இதுவே பொற்காலமென இந்த பூமி அந்தசாமி ஆகியவை பூரிக்க புரட்சித்தலைவர் அவர்களின் பாதையில் இவ்வாரியம் செயல்படுகிறது.

## மேட்டுக்குடி பகுதிகள்

குடியிருப்புகள் கட்டினால மட்டும் போதாது. அப்பகுதி சிறந்த சுகாதார வசதிகளுடன் அடிப்படைத் தேவைகளை பூர்த்தி செய்யும் வசதிகளுடன் இருக்க வேண்டும் என்பதால் திட்டப்பகுதிகள் தோறும் பூங்கா. நூல்நிலையம் கூட்டுறவு அங்காடி, சமூக நலக்கூடம், விளையாட்டு அரங்கம் போன்றவையும் மேட்டுக்குடி பகுதிகளுக்கு ஈடாக செய்து தரப்பட்டுள்ளது.

குடிசைகளை அகற்றி மாடிக் குடியிருப்புகள் கட்டும் பணி நடப்பது ஒருபுறம் இருக்க-இருக்கும் குடிசைப்பகுதிகளில்தேவையான அனைத்துவசதிகளும் செய்து தரும்பணி விரைவுபடுத்தப் பட்ட மேம்பாட்டுத்திட்டம் என்ற அடிப்படையில் சாலை தோறும் மின் விளக்கு, 10 குடிசைக்கு ஒரு குடிநீர்க் குழாய். 4 குடிசைகளுக்கு ஒரு கழிவறை சாக்கடை நீர்- மழைநீர் ஆகியவை வடியஉரிய வடிகால் ஆகியவையும் செய்துதரும் பணி செவ்வனே நடைபெற்று வருகின்றது. இதன்படி இதுவரை ரூபாய் 454.22 லட்சம் செலவிடப்பட்டு 59018 குடும்பங்கள் பயன் அடைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். கடந்த இரண்டு ஆண்டுகளில் (84—86) இதற்காக ரூபாய் 121.64 லட்சம் செலவிடப்பட்டுள்ளது.

மேலும் சென்னை பெருநகர் வளர்ச்சி மேம்பாட்டுத் திட்டம் 1 மற்றும் 2 ஆகியவை வாரியத்தினால் மேற்கொள்ளப்பட்டு அதன்படி குடிசைகளில் வசிப்பவர்களுக்கு அவரவர் வசிக்கும் நிலபரப்பினைகுறைந்த விலையில்- அதனை சுலப தவணையில் செலுத்தும் வகையில் அவர்கள் பெயருக்கு விக்கிரயம் செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. மேலும் இக் குடிசை வாசிகள் விரும்பினால அவர்களது குடிசைகளை சீர்படுத்திக் கொள்ள ரூபாய் 3500/- வரை உலகவங்கி நிதியின் அடிப்படையில் கடன்உதவி அளிக்கபபடுகிறது. அக் குடிசைவாசி ரூபாய்200/-க்கும் குறைவான வருவாய் உடையவர் எனில் அவர்களுக்கு ரூபாய் 600/-வரை மானியம் வழங்கப்படுகிறது

## வாரியம் வசதி

ஆற்றுப்படுகை ஓரமும். மழைநீர் ஓடை ஓரமும் அமைந்துள்ள குடிசைப் பகுதிகள் மழை காலத்தில் பாதிக்கப்படும்போதும் அப்பகுதிமக்களுக்கு மாற்றிடம் தந்து வாரியம் உதவி வருகிறது.

முதியோர் கல்வி, சமுதாய மேம்பாட்டுத்திட்டம் சுகாதாரமான வாழ்க்கைக்கு வழிகாட்டுதல் போன்ற பணிகளை குடிசை பகுதிகளில் வாரியம் அதன் அங்கமான சமுதாயவளர்ச்சிப் பிரிவு மூலம்செய்துவருகின்றது 3 ஆண்டுகளில் 30லட்சம் வீடுகள் வீடற்றோர்க்கு வீடு என்ற புதிய திட்டத்தைத் தமிழக முதல்வர் அறிவித்துள்ளார். இந்த பொற்காலத்தின் மன்னர் இட்ட கட்டளை சிரமேற் கொண்டு வாரியம் நடப்பு ஆண்டில் 50000 வீடுகள் கட்ட நடவடிக்கைஎடுத்துவருகிறது. இதன் முதற் கட்டமாக மதுரை வைகை ஆற்றங்கரையில் 2000 வீடுகள் கட்ட கட்டுமானப் பணிகள் நடைபெற்றுவருகின்றது.

சென்னை மாநகரில் மட்டுமே இயங்கிய இந்த வாரித்தை தமிழகம் முழுவதும் விரிவடையச்செய்த பெருமை புரட்சித் தலைவரையே சாரும். தற்போது வாரியப்பணிகள் சேலம். திருச்சி, மதுரை, கோவை ஆகிய மாவட்டங்களில் மேற்கொள்ளப்பட்டு அங்குள்ள குடிசைப் பகுதிகளில்விரைவுபடுத்தப் பட்டமேம்பாட்டுத்திட்டம் நடைமுறைபடுத்தப்பட்டுள்ளன. புரட்சித் தலைவரின் 10 ஆண்டு கால ஆட்சி பொற்காலமாக விளங்க இத்தகு சிறப்புமிக்க பணிகளை இவ்வாரியம் செய்து வருகிறது.

கம்பராமாயணத்தில் ஒரு காட்சி நினைவுக்கு வருகின்றது. இலங்கை போர் முடிந்து சீதையுடன் நாடு திரும்பிய ராமரின் மகுடாபிஷேகம் நடைபெற்றது. அனைவரும் ராமருக்கு காணிக்கை செலுத்தினர் எங்கும் ஒரே மகிழ்ச்சி வெள்ளம் அரசவை கலைகட்டியுள்ளது. சீதாதேவியார் இராமரிடம் கேட்டார். அனுமனின் காணிக்கை என்னவென்று. மாருதியின் கண்களில் கண்ணீர் மல்க அது கீழ்க்கண்டவாறு மனம் புலம்பியது. இராமநானோ பற்றற்றவன். எல்லாம நீயே என வந்தவன் என்னிடம் என்ன எதிர் பார்ப்பு-பார் எனது நெஞ்சை என கூறி தனது இருகரங்களால் நெஞ்சை பிளந்து காட்ட அவரது (அனுமான்) நெஞ்சில் அதே ராமமகுடாபிஷேக காட்சி அனைவருக்கும் தெரிந்தது. பார்எனது இதயதெய்வமே நீ-இதில் நான் என்பது எங்கே-இதைஏன்குறிப்பிடுகிறேன் என்றால் நன்றிக்கும் பக்திக்கும் மொத்த வடிவமே அனுமான்தான். அந்த இராமருக்கு அனுமான்- இந்த புரட்சித் தலைவருக்கு- என்எண்ணமெல்லாம் அவர் புகழ்பாடுதலும், இவர் காட்டும் பாதையில் பணியாற்றுவதுமே எனது கடமையாகும். நான் பொறுப்பேற்றுள்ள தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியத்தின் கடமையாகும். ★

## தொண்டியில் ரூ.47லட்சம் செலவில் மீன்பிடி துறைமுகம்

இராமநாதபுரம் ஜூன் 29 இராமநாதபுரம்மாவட்டம் தொண்டியில் ரூபாய் 46 லட்சத்து 60 ஆயிரம் செலவில் மீன்பிடி துறை முகவளாகம் கட்டப்பட்டு வருகிறது என்று மாவட்ட ஆட்சித்தலைவர் தேவேந்திரநாத் சாரங்கி பத்திரிகையாளர்களிடம் தெரிவித்தார்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் தொண்டிப் பகுதியில உள்ள மீனவர்களின் தேவைகளை பூர்த்தி செய்யும் வகையில் மீன்பிடித்துறைமுக வளாகம் கட்டப்பட்டு வருகிறது. ரூபாய் 5 லட்சத்து 60 ஆயிரம் செலவில் கப்பல் கட்டும் கூடம் பணி முடிக்கப்பட்டுள்ளது. ரூபாய் 41 லட்சம் செலவில் படகுத்துறை, வலை பின்னும் கூடம், மீன் விற்பனைக்கூடம். நிர்வாக அலுவலககட்டிடம்மற்றும் இணைப்புச் சாலை போன்ற வேலைகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. இப்பணிகள் ஆகஸ்டு மாத இறுதிக்குள் முடிக்கப்பட்டுவிடும்.

# மொழி வளர்ச்சியின் முன்னோடி ★பாடநூல் நிறுவனம்★

-: கோடம்பாக்கம் குமார்

மேலாண்மை இயக்குநர், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் :-

பாடநூல் நிறுவனத்தின் தலையாய பணி தமிழகத்திலுள்ள பள்ளி மாணவர்களுக்கு நாட்டுடைமையாக்கப்பட்ட பாடநூல்கள் அனைத்தையும் தரமான வகையில் தயாரித்து-உரிய காலத்தில் அச்சிட்டு-நியாயமான விலையில் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பது தான் இந்தத் தலையாய பணியோடு ஒரு சில சிறப்புப் பணிகளையும் இந்த நிறுவனம் செய்து வருகின்றது இந்தச் சிறப்புப் பணிகளில் முதலிடம் வகிப்பது தமிழ் மொழி வளர்ச்சிப் பணிகளாகும்:

இந்தத் தமிழ் வளர்ச்சித் தொண்டினைச் சரியாகப் புரிந்து கொள்ளச் சற்றுப் பின்னோக்கிப் பார்க்க வேண்டும் நாம் அன்றைய ''சென்னை'' மாநில அரசு 1.4.1959 அன்று கல்லூரிகளில் தமிழ்வழியாகப் பாடங்கள் பயிற்றுவிக்கப்பட வேண்டும்என்பதற்காக 'கல்லூரித் தமிழ்க்குழு' என்னும் பெயரில் ஓர் அமைப்பினை உருவாக்கியது. இதன் செயற்பாடுகள்சற்று வேகம் பெற்றதும் இதுவே ''தமிழ்வெளியீட்டுக் கழகம்'' என்றும்புதியஅமைப்பாக உருமாறியது.

1968ஆம் ஆண்டு நடுவணரசு ரூபாய் 1 கோடித் திட்டத்தை அறிவித்தது. அதன்படி கல்லூரிப் பாடநூல்களைத் தமிழ் வழியில் வெளியிடும் பொறுப்பு தமிழ் வெளியீட்டுக் கழகத்திடம் ஒப்படைக்கப்பட்டது பாடநூல் நிறுவனம் 1970ல் தொடங்கப்பட்டதும் தமிழ் வெளியீட்டுக் கழகம் இதனுடன்இணைந்தது. இந்த வரலாற்று வளர்ச்சியினைப் பார்க்கும் போது பாடநூல் நிறுவனத்தின் முன்னோடி அமைப்புகள் தமிழ்மொழி வளர்ச்சிக்கென்றே தொடங்கப்பட்டவை. பாடநூல் நிறுவனத்தின் இந்தப் பாரம்பரியமான பண்பாடுஇன்று வரை வளத்தோடு தொடர்கிறது.

தமிழால் என்ன முடியும்? கல்லூரி நிலையில் பல்கலைக் கழக நிலையில் எந்தவொரு பாடத்தையேனும் தாய்மொழியான தமிழில் கற்பிக்க இயலுமா? அதற்கு வசதியாகத் தமிழில் பாடநூல்கள் இயற்றப்பட்டிருக்கின்றனவா? தமிழில் இத்தகைய பாடநூல்களை இயற்றவும் தான் முடியுமா?-இப்படிப்பட்ட கேள்விக்கணைகளை ஆங்கில ஆதரவாளர்கள் எய்து கொண்டிருந்தார்கள் ஒரு காலத்தில்.

இவர்களுக்குப் பதில்கூறுவதற்குக் கிளம்பியதுதமிழநாட்டுப் பாடநூல் நிறுவனம். இன்றுவரை கல்லூரி மாணவர்கள் பாடநூலாகவும் பயிற்சி நூலாகவும் பயன்படுத்த 910 நூல்கள் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன.

தமிழில் இயலுமாஎன்று கேட்டவர்களின் தலை குனியும் வண்ணம் இந்த நூல்களின் பொருள் வீச்சு அமைந்திருக்கிறது. வெறும் கலை மற்றும் மானிடவியல் நூல்கள் மட்டும் அல்லாமல் அறிவியல் பாடங்களுக்கும் தொழிற்கல்விப் பிரிவுகளான மருத்துவம்,பொறியியல் போன்றவற்றுக்கும் தகுந்த பாடநூல்கள்வெளியிடப்பட்டுள்ளன.

மொழி வளர்ச்சிக்கு எல்லா நிலைகளிலும் பயன்படுவது அகரமுதலிகள் எனப்படும் அகராதிகள். சரியாகச் சொல்ல வேண்டுமானால் மொழி என்னும் மாளிகை வானளாவிய வகையில் வளர வேண்டுமானால் அதற்குப்பலமான அடிப்படை தேவை. அந்த அடிப்படையாக இருப்பது அகராதிகள்.

இந்நிறுவனம் சொந்த வகையிலும் பிறர் சார்பிலும் வெளியிட்ட அகராதிகள் மூன்று. 1.தமிழ்-தமிழ் அகர முதலி 2.செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி 3.தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி.

இவற்றுள் சொற்பிறப்பியல் அகரமுதலி ''மொழி ஞாயிறு'' என்னும் சிறப்பு பெயர் பெற்றிருந்த தேவநேயப்பாவாணரால் தொகுக்கப்பட்டது. தமிழில் இது ஒரு புதிய முயற்சி. ஒவ்வொரு தமிழ்ச் சொல்லும் எந்த வேர்ச் சொல்லிலிருந்து எப்படிக் கருவாகி உருவாகி இன்றைய வடிவத்தை எட்டியிருக்கிறது என்று நிரூபித்துக் காட்டுவது இந்த அகராதி.

தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி இந்தியாவிலுள்ள பிற எந்த மொழியிலும் சாதிக்க முடியாத அருஞ் சாதனையாகும்.

பாடநூல் நிறுவனத்தின் மொழித்தொண்டு பல சிறப்பு வெளியீடுகளின் வடிவத்தில் மலர்ந்து கொண்டிருக்கின்றது.

மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சிதலைவர் அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதும் தமிழ்மொழியில் உலகின சிறப்பான இலக்கியங்கள் அனைத்தையும் மொழி பெயர்த்து வெளியிடவும், தமிழ் மொழியில் உள்ள இலக்கியங்களை உலக மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிடவும் ஒரு குழுவினை அமைத்தார். தமிழ வளர்ச்சிக்கு என்றே உருவான இந்தத் திட்டத்தை செயற்படுத்தும் பொறுப்பில் ஒரு பங்கு பாடநூல் நிறுவனத்துக்கும் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இக்குழுவின் நூல்களைப் பாடநூல் நிறுவனமே அச்சிட்டு வெளியிட்டு வருகின்றது. இவையனைத்திலும் மொழி வளர்ச்சியில் சிறப்பிடம் பெற்றிருப்பதுதமிழ் எழுத்துச் சீர்திருத்தம்

1979ல் தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவைத் தமிழக அரசே பெருமளவில் நடத்திய போது தமிழ்மொழியின் வரலாற்றில் ஒரு புரட்சிகரமான மாறுதலைச் செய்யும் ஆணை ஒன்றினை மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்கள் பிறப்பித்தார். அதுவேஎழுத்துச் சீர்திருத்த ஆணை.

தமிழை இருபதாம் நூற்றாண்டின் தேவைகளுக்கு ஏற்ற மொழியாகவும் அறிவியல் வளர்ச்சியோடு இணைந்து வளரும் மொழியாகவும் மாற்ற வேண்டுமானால் அதன் எழுத்துகளின் வரிவடிவம் சீரமைக்கப்பட வேண்டும்- இது பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியாரின் கொள்கை. இந்த எழுத்துச் சீர்திருத்தத்தைத் தந்தை பெரியார் தாமே கடைப்பிடித்தும் வந்தார்.

தந்தை பெரியாரின் தன்மான வாரிசு என்று தங்களை முத்திரை குத்திக் காட்டும் ஆட்சிகள் தமிழகத்தில் நடந்தபோது கூட இந்தச் சீர்திருத்தம் செயற்படுத்தப்படவில்லை

ஆனால் புரட்சித்தலைவர் இந்த அரிய செயலைச் செய்து காட்டினார். தமிழ்நாட்டின் பெரிய ஏடுகள் ஒன்று கூட அதனைப் பின்பற்றவில்லை. ஆனால் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் தனது நூல்கள் அனைத்தையும் சீர்திருத்த தமிழ் எழுத்துக்களில் அச்சிட்டது. இதனால் தமிழ்நாட்டின் குக்கிராமங்களில் கூட மூலைமுடுக்கெல்லாம் கூட புதிய தமிழ் எழுத்துக்களின் வரிவடிவம் வெற்றிகரமாகப் பரவிவிட்டது

புரட்சித்தலைவரின் இதயத்து உணர்வுகளைப்புரிந்துகொண்டு அதன்படி செயற்படுவதில் பாடநூல் நிறுவனம் பிற எந்த அரசு நிறுவனங்களுக்கும்சோடை போனதே இல்லை என்பது தான் கடந்த 10 ஆண்டு கால வரலாறு!

# தமிழக ஆஸ்பெஸ்டாஸ் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு அமல்

சென்னை, ஜூன் 29- தமிழ்நாடு அரசுக்கு சொந்தமான ஆஸ்பெஸ்டாஸ் தொழிற்சாலை ஊழியர்களுக்கு ஊதிய உயர்வும் பாக்கித் தொகையும் தமிழ்நாடு சிமெண்ட் நிறுவனத்தின் தலைவர் ஈ. வெ. கி. சுலோசனா சம்பத் முன்னிலையில் தமிழ்நாடு ஆஸ்பெஸ்டாஸ் தொழிற்சாலையின் 3 வருட கால அமலில் இருக்கும் ஊதிய உயர்வு ஒப்பந்தம் கையெழுத்தாகியது. இந்த ஒப்பந்தத்தின்படி ஊதிய உயர்வு உட்பட 28 சலுகைகள் தமிழ்நாடு ஆஸ்பெஸ்டாஸ் தொழிலாளர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது.

இந்த சலுகைகள் அனைத்தும் 1.1.86 முதல் அமலுக்கு வருகிறது. இந்த ஒப்பந்தத்தின் மூலம் 264 தொழிலாளர்கள் நேரடி பயன் அடைகிறார்கள். ரூபாய் 4.64 லட்சம் பாக்கித் தொகையாக 264 தொழிலாளர்களுக்கு தமிழ்நாடு சிமெண்ட்ஸ் நிறுவனத்தின் தலைவர் ஈ.வெ.கி.சுலோசனா சம்பத் வழங்கினார். ஒவ்வொரு தொழிலாளிக்கும் சராசரியாக ரூபாய் 1,800 பாக்கி தொகையாக கிடைத்தது. இந்த ஒப்பந்தத்தின் மூலம் மாதம் ஒன்றுக்கு ஒவ்வொரு தொழிலாளிக்கும் ரூபாய் 250 முதல் ரூபாய் 300 வரை ஊதிய உயர்வு கிடைத்துள்ளது.

## ஜப்பான் மின் கலங்கள்

ஆலங்குளம் சிமெண்ட் தொழிற்சாலையில் 5,000 கிலோவாட் திறன் கொண்ட இரண்டு சுய சார்பு மின் உற்பத்தி கலன்கள் நிறுவப்பட்டுள்ளன. இந்த மின் கலன்கள் ஜப்பான் நாட்டிலிருந்து தருவிக்கப்பட்டுள்ளன. இந்த மின் கலன்கள் நிறுவ ஆகும் மொத்த செலவு ரூபாய் 2.7 கோடி ஆகும். இந்த மின் கலன்கள் ஜூலை மாதம் முதல் இயங்க இருக்கின்றன. ஆலங்குளம் சிமெண்ட் ஆலையின் 40 சதவிகித மின் சக்தி தேவையை இந்த சுய சார்பு மின் உற்பத்திக் கலன்கள் உற்பத்தி செய்யும். இதன் மூலம் கிடைக்கும் மின்சாரத்தினால் இந்த ஆலையில் நிறுவப்பட்டுள்ள தூசி தடுக்கும் இயந்திரங்கள் தொடர்ந்து செயல்படுத்த முடியும். இதனால் இந்த தொழிற்சாலையிலிருந்து வெளியாகும் தூசி தடுக்கப்பட்டு இப்பகுதியின் தூய்மை கெடாமல் பாதுகாக்கப்படும் என்று சுலோசனா சம்பத் தெரிவித்தார்.

# நடுக்கடலில் சிக்கித் தவித்த கப்பல் எங்கே? விமானம் தேடுகிறது

விசாகப்பட்டினம், ஜூன் 29 — அந்தமான் அருகே நடுக்கடலில் சிக்கித்தவித்த ஒரு கப்பலை மீட்கும் வேலை நடந்து வருகிறது.

போர்ட் பிளேர் அருகே ஒரு கப்பல் பழுதுபட்டு நிற்கிறது. அதில் 4 பேர் இருந்தனர். அவர்கள் ஒயர்லெஸ் மூலம் தரைப் பகுதிக்கு செய்தி அனுப்பினார்கள். அதை பயிற்சி ஒயாலஸ் இயக்குனர்கள் குமாரி பாரதி (ஐதராபாத்) வி. சுப்பிரமணியம் (பெல்லாரி) ஆகியோர் கேட்டனர். உடனே ஆந்திர மாநில அரசு தலைமைச் செயலாளருக்கு குமாரி பாரதி செய்தி தெரிவித்தார்.

இதைத் தொடர்ந்து கடல் எல்லை காவல் படை கப்பல்களும், விமானங்களும் அந்த கப்பலைத் தேடி வருகின்றன.

தவித்துக் கொண்டிருக்கும் கப்பலில் உள்ளவர்கள் குடிக்கத் தண்ணீர் இல்லை உடனே கொண்டு வாருங்கள் என்றும் ஒயர்லெசில் கேட்டுக் கொண்டனர்.

அனேகமாக இன்று பகலுக்குள் கப்பல் கண்டு பிடிக்கப்பட்டு 4 பேரும் மீட்கப்பட்டு விடுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## சென்னை 55, 56-வது வட்டங்கள்

சென்னை பூங்கா நகர் 55, 56வது வட்டங்கள் சார்பில் 30ம் தேதி காலை 11 மணியளவில் 1000 பேருக்கு அன்னதானம் 200 பேருக்கு வேட்டி-சேலை வழங்கும் விழா நடைபெறுகிறது.

இவ்விழாவில் அமைச்சர்கள் அண்டே. ஆனூர் ஜெகதீசன் மற்றும் ஜெ. குமார டி. வி. சுகுமார், ஏ. எம். குப்புசாமி செட்டி, ஜி எஸ் பாபு, செல்வராஜ் மற்றும் பலர் கலந்து கொள்கிறார்கள்.

## கலவரம்: 6 பேருக்கு வெட்டு

சென்னை, ஜூன். 29— எண்ணூர் நெட்டுக்குப்பத்தில் கோவில் உண்டியல் பணத்தை கையாடல் செய்த ஆறுமுகம் கருணாநந்தம் ஆகியோரை கண்டித்த 6 பேர் பயங்கர ஆயுதங்களால் வெட்டப்பட்டனர்

இக்கலவரத்தின் போது ஆறுமுகம் இளவரசன், அமுதன் நாகப்பன் சங்கர் ராஜு ஆகிய 6 பேர் காயமுற்றனர்

இதுகுறித்து எண்ணூர் போலீசார் வழக்குப் பதிவு செய்து விசாரணை செய்து வருகின்றனர்

## பெரம்பலூர் தொகுதியில் இலவச உடை வழங்கு விழா

திருச்சி, ஜூன் 29— திருச்சி மாவட்டம் பெரம்பலூர் தொகுதியில் கழக அரசின் 10ஆம் ஆண்டு தொடக்க விழாவை முன்னிட்டு ஆயிரம் பேருக்கு இலவச சீருடையும் 5000 பேருக்கு அன்னதானமும் வழங்கப்படுகிறது. இது குறித்து பெரம்பலூர் ஒன்றிய கழக செயலாளரும் திருச்சி மாவட்ட பால்வளத் தலைவருமான பொன். கலியபெருமாள் ஓர் அறிக்கை மூலம் தெரிவித்திருப்பதாவது:

கழக அரசின் 10ம் ஆண்டு தொடக்க விழா அன்று தொகுதியில் உள்ள ஒவ்வொரு கிளைக்கழகத்திலும் இலவச ஆடைகளையும் அன்னதானத்தையும் வழங்கி, இது குறித்து ஒன்றிய அலுவலகத்திற்கு தகவல் தெரிவிப்பதுடன் 30 ம் தேதி திருச்சியில் நடக்கும் பொதுக்கூட்டத்திலும், ஊர்வலத்திலும் திரளாக கலந்து கொள்ள வேண்டும். மதுரை மாநாட்டுக்கு ஒவ்வொரு கிளையிலும் இருந்து திரளாக தொண்டர்கள் கலந்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு ஒன்றியச் செயலாளர் பொன். கலியபெருமாள் கேட்டுக்கொண்டுள்ளார்.



# புரட்சித் தலைவர் ஆட்சியில் தமிழகம் கைத்தறித் துறையில் இந்தியாவில் முன்னணியில் இருக்கிறது!





★ கைத்தறி துணியை சீருடைக்கு பயன்படுத்துவதில் தமிழகமே முன்னணியில் இருக்கிறது. பயனடையும் பள்ளி மாணவ-மாணவிகள் : 58.68 இலட்சம் பேர்.

★ இந்தியாவிலேயே லாபகரமாக தங்க சரிகை உற்பத்தி செய்யும் அரசு நிறுவனம் தமிழ் நாட்டிலே தான் இருக்கிறது.

★ உற்பத்தித்திறன், லாபமீட்டுதல், நூல் தரம் ஆகியவற்றில் இந்தியாவிலுள்ள கூட்டுறவு நூற்பாலைகள் அனைத்திலும் முதலிடம் வகிக்கும் கூட்டுறவு நூற்பாலை சேலம் கூட்டுறவு நூற்பாலைதான் என்று மைய அரசு அறிவித்திருக்கிறது.

★ கைத்தறி நெசவாளர்களுக்கு மலிவான விலையில் தரமான நூல்களை தேவைக்கு மேல் கூட்டுறவு நூற்பாலைகள் மூலம் உற்பத்தி செய்வதும், இந்திய அரசு கைத்தறி நெசவாளர்களுக்கு நூற்பாலையில் நூல் வழங்க நிர்ணயித்திருக்கின்ற 50% இலக்கை தாண்டி 70%க்கு விநியோகித்திருப்பதும் தமிழகம் தான்.

★ மாதம் ஒருமுறை கைத்தறிக்கு வேண்டிய நூலின் விலையை நிர்ணயம் செய்யும் நடைமுறை உள்ளது தமிழ்நாடே.

★ கூட்டுறவு தேசீய குறியீட்டைவிட நெசவாளர்களை கூட்டுறவுத் துறையின் கீழ் கொண்டுவந்த பெருமையும் தமிழ்நாட்டின் எம்.ஜி.ஆர் அரசுக்கே உண்டு.

★ ஜனதா ரகத்தில் கூட ஆடைகளை பல கண் கவர் புது வண்ணங்களில் புடவை தயார் செய்வதும் தமிழ்நாடே.

★ பாலியஸ்டரில் துணி ஆலைகளில் நெய்யப்படும் துணியைப்போல் போட்டி போட்டு உள் நாட்டு உபயோகத்திற்கும் ஏற்றுமதிக்கும் கைத்தறி ரகங்களை தயாரிப்பதும் தமிழ்நாடே.

★ பல பருவத்தினர் விரும்பும் பயணத்திற்கேற்ற பலவித பைகளை கைத்தறி துணியில் தயாரிக்கலாம் என்று நிரூபித்தது தமிழ்நாட்டு கோ-ஆப்டெக்ஸ்.

★ தறிகளை நவீனமயமாக்குவதற்கு ரூ. 21 இலட்சம் ஆண்டு ஒன்றுக்கு செலவிட்டு மேலும் இவ்வாண்டு 10,000 தறிகளை நவீன மயமாக்கி இந்தியாவில் முதலிடம் வகிப்பது தமிழகம் தான்.

★ சிக்கனம் மற்றும் சேமிப்பு திட்டத்தின் கீழ் பயனடைபவர்கள் 1.12 இலட்சம் அங்கத்தினர்கள் தமிழ்நாட்டில் தான் இருக்கிறார்கள்.

★ மாவட்ட ஆட்சித்தலைவர்கள் 3 மாதங்களுக்கு ஒருமுறை மாவட்ட வாரியாக நெசவாளர்கள் குறை போக்க கலந்துறையாட ஆணையிட்டவர் முதல்வர் எம்.ஜி.ஆர்.

★ கம்ப்யூட்டர் டி.வி மூலம் டிசைன்ஸ் தயாரிக்கும் யுக்தியையும் இந்தியாவில் முதன்முதலில் கையாள்வது கோ-ஆப்டெக்ஸ்தான்.



★ கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கங்களின் எண்ணிக்கை 1977-78ல் 946 சங்கங்கள். 1985-86ல் 1606 சங்கங்கள்.

★ 9 ஆண்டுகளில் (ரூபாய் கோடியில்)

| | 1977-78 | 1985-86 |
|---|---|---|
| கைத்தறித் துணி உற்பத்தி | 42.15 | 162.47 |
| கைத்தறித் துணி விற்பனை | 44.28 | 182.43 |

★ இந்தியாவிலேயே ரிபேட் மூலம் மொத்த வியாபாரம், சில்லறை வியாபாரத்திற்கு அதிக சலுகை வழங்கிய அரசே அனைத்திந்திய அண்ணா தி.மு.க. அரசுதான்.

| ஆண்டுகள் | அரசால் செலவிடப்பட்ட தொகை (ரூ. இலட்சத்தில்) |
|---|---|
| 1982-83 | 1350-00 |
| 1983-84 | 1235-77 |
| 1984-85 | 1600-00 |
| 1985-86 | 1760-36 |

★ 'ஹேண்ட்லூம் டெக்னாலஜி' பட்டம் பெற்று வேலையில்லாதோர் தமிழகத்தில் கிடையாது.

★ நெசவாளர் பனிக்காலத்தில் இறந்தால் எந்த சந்தாவும் கட்டாமல் அவர் வாரிசுகள் ரூ. 10,000 பெறவும், ஓய்வு ஊதியத்திற்காக ரூபாய் 10/- மாதம் செலுத்தினால் ஓய்வு பெறும் முன் ரூ. 33,500 பெறும் ஓய்வு ஊதிய சட்டமும், விபத்து நிவாரண சட்டமும் முதன் முதலில் இந்தியாவிலே கொண்டுவந்த அரசு எம்.ஜி.ஆர் அரசு ஒன்றே.

★ கம்ப்யூட்டர் கணக்கு முறையை கோ-ஆப்டெக்ஸ்தான் கைத்தறித் துணி வியாபாரத்தில் முதன் முதலில் அறிமுகப்படுத்தியது.

★ வெள்ளம், புயல், வறட்சி காலத்தில் ஏழைகளுக்கு இலவசமாக வேட்டி, புடவை வழங்கிய வகையில் செலவு செய்த தொகை

1983-84
1984-85 ரூ. 1154.78 இலட்சம்

வெள்ளம், புயலில் பாதிக்கப்பட்டோர் :

| | | |
|---|---|---|
| 1984-85 | ரூ. | 250.44 இலட்சம் |
| 1985-86 | ரூ. | 244.97 இலட்சம் |

★ முதியவர்களுக்கு இலவச புடவை, வேட்டி வழங்கிய வகையில் செலவு செய்த தொகை

| | | |
|---|---|---|
| 1983-84 | ரூ. | 73.39 இலட்சம் |
| 1984-85 | ரூ. | 98.30 இலட்சம் |
| 1985-86 | ரூ. | 108.98 இலட்சம் |



★ கைத்தறி நெசவாளர்கள் சமூக பொருளாதார வாழ்வில் புது திருப்பத்தை ஏற்படுத்த தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் எம்.ஜி.ஆர் கைத்தறி நெசவாளர் வளர்ச்சி அறக்கட்டளை என்ற பெயரில் ஏற்படுத்திய பெருமையும் தமிழகத்தையே சாரும்.

★ நெசவாளர்களுக்கு வீடுகட்டும் திட்டத்திலும் தமிழகம் முன்னோடியாக 3,027 வீடுகள் கட்டி முடித்திருக்கிறது.

★ காஞ்சீபுரத்தில் பட்டு நெசவாளர் கூட்டுறவு சங்கத்தில் நெசவாளர்களுக்கு 63% அதிகமாக போனஸ் கொடுக்கப்பட்டதும் தமிழ்நாட்டில்தான்.

★ கூட்டுறவுத் துறையில் கைத்தறித்தொழிலுக்கான குறைந்த பட்ச கூலி நிர்ணயித்து ஆணை பிறப்பித்தது எம்.ஜி.ஆர் அரசே.

★ நூற்பு ஆலைகளில் வேலை செய்வோர்களுக்கு தமிழ்நாட்டில்தான் சம்பளம் அதிகம்.

★ தனியாரிடம் வேலை பார்க்கும் நெசவாளர்கள் பணி பாதுகாப்பு மற்றும் பல்வகை சலுகைகள் அளித்ததும் தமிழக அரசே.

வெளியீடு : கைத்தறித்துறை, சென்னை-600 108.
தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லி... -600 008.

PR/28266/592/86/ELEGANT